உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.



சீகாழிச் சிற்றம்பலநாடிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# துகளறு போதம்.



திக்கம் செல்லையா என வழங்கும்
அச்சுவேலியூர்
**ஈசானசிவன்**
**இயற்றிய உரையுடன்**

பருத்தித்துறை
கலாநிதியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

—

[... தைமீ.] [1950



[1950.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# துகளறு போதம்.

நிக்கம் செல்லையா என வழங்கும்

அச்சுவேலியூர்

ஈசானசிவன்

இயற்றிய உரையுடன்



பருத்தித்துறை

கலாநிதியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

விரோதி௵ தைமீ.] [1950.

உ

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாசுரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
வாழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

## கடவுள் வணக்கம்.

நீர்வளையி லங்கரனே நின்மலனே சின்மயனே
பாருலகை மெல்லாம் பயந்தோனே—சீரார்
துகளறு போதத் துரையுரைக்கத் தூய
புகழுணிநின் பாதம் புகல்.

கந்த வனத்தெங் கருணைக் கடலைக் கனகமன்றிற்
சந்தத மைந்தொழில் நட்டம் பயிலுஞ் சபாமணியை
நந்த மியற்றமிழ்த் தேசிகன் வேன்மயில் வாகனனைப்
பைந்துணர் கொண்டு பரவிப் புகழ்ந்து பணிகுவமே.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முகவுரை.

அநாதியே மலபந்தமுள்ளனவும் அறிவித்தாலன்றி யறியாதனவும் சார்ந்ததன் வண்ணமானவையும் ஒன்றையறியுங்கால் பிறிதொன்றனையு மறியாது அழுந்தியறியுமியல்பினவுமாகிய உயிர்கள் கேவலம் சகலம் சுத்த மென மூன்றவத்தை யெய்துவன.

இக்கேவலத்து ஆணவமலமொன்றுமே ஆன்ம அறிவு முழுவதையு மறைத்துக்கொள்ள அந்நிலையிலான்மா அறிவிச்சைசெயலொன்றுமின்றி அவ்வாணவமலத்தோடு மாத்திரையே கூடிநிற்கும். இதனை:-

"அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடுஞ்
செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தி லான்மா."

என்பதனானுமுணர்தற்பாற்று.

இனி, கேவலமும் அநாதிகேவலம் ஆதிகேவலமென இருதிறப் படுமென்ப. ஆதிகேவலஞ் சர்வசங்காரகாலத்து நிகழ்வதெனக்கூறுப. ஆண்டு அதிசூக்குமவைந்தொழிலுமுள எனவுங் கூறுப. அதனையே "நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே." எனக் கூறியவாற்றானுமுணர் தற்பாற்று. எம்மிறைவர்க்கு நள்ளிருளுமின்று. நண்பகலுமின்று. பின்னை யார்க்குளதெனின் ஆணவமலத்தோடு மாத்திரையே வாளாகிடக்குமான் மாவுக்குளது, என்றும் பிரியாதுடனாய் நிற்குமிறைவனார் அக்கேவலத்தினு மியற்றியருளுந் திருத்தமே நள்ளிருளி நட்டம் எனப்பட்டது. பயிலல் பழகுதல். ஈண்டு சூக்குமவைந்தொழிலே யுணர்த்திநிற்றது. இக்கேவலத்து ஆன் மாக்கள் நுகர்வது துன்பமொன்றே. இதனை:- "துன்பமே பிறப்பே யிறப் பொடு மயக்காத் தொடக்கெலா மறுத்தநற் சோதி" என்பதனானுமுணர்தற் பாற்று. ஈண்டு துன்பமே எனத் தேற்றேகாரங்கொடுத்துக் கூறியிருப்பது

கேவலத்து நிகழ்ச்சியே. ஏகாரம் பிரிநிலையுமாம். இத்துன்ப நுகர்வில் ஆன்மாக்கட்குள்ள வெறுப்பும் அதன் மறுதலையாகிய விருப்புமே மூலகன்மமெனவு மிருவினைப்பாசமெனவுங் கூறப்படுவது.

இனி, இந்நிலையிற் றுன்புறுமான்மாக்களிடத்துக்கொண்ட கைம்மாறு கருதாத பெருங்கருணையானே அவ்வவர் மலபரிபாக தாரதம்மியத்துக்கிசைந்த தநுகரணாதிகளைக் கொடுத்தருள அவை நால்வகைத்தோற்றத்து எழுவகைப்பிறப்பி னெண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதங்களாகப் பிறந்து சகலாவத்தையையடைவன. இச்சகலாவத்தையினியல்பை;

"உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்
வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயத் தன்னில்
புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு மூன்று
திரிதருஞ் சகல மான வவத்தையிற் சீவன் சென்றே."

என்பதனானறியப்படும்.

இனி, சகலாவத்தையின்கண்ணதாய எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதங்களிற் பிறக்குமான்மாக்கள் மானுடப் பிறவியையடைதல் கடலைக் கையால் நீந்திக் கரையையடைந்த தன்மை போலாகும். அங்ஙனம் மானுடப் பிறவியையெய்திய வழியும் நான்மறை வழக்குடைய நாட்டிற் பிறத்தல் புண்ணியமிகுதியானாவது. அவ்வாறு பிறந்து தவநெறியில் நின்றொழுகுங் குடியிற்பிறந்து பரசமயச்சார்பிற் சேராது சைவசமயத்தைச் சார்ந்து அந்நெறியினிற்கும் புண்ணியம் செயற்கரிய செயலானாய பெறற்கரிய பேறாகும். அந்நிலையையடைந்தவான்மாக்கள் அறியாத வண்ணமே சிவபுண்ணியத்தைச் செய்யுமாறு எம்மிறைவனார் செய்வித்தருளி, அப்புண்ணிய விசேடத்தினாலே அதன்பின்னர் அச்சிவபுண்ணியத்தையறிந்து செய்யுமாறு செய்வித்தருளி அதன்பினெய்தற்குரியவகைச் சமயமாறனுக்கும் பொதுவாயுள்ள உபாயச் சரியை கிரியா யோக ஞானமென்னுநான்கையு மறிந்தொழுகுமாறு மென்மேல நடாத்துவித்தருளியும் அவ்வொழுக்க நெறிநின்றோ ரடைதற்குரிய சித்தாந்த சைவத்துட் கூறிய சிறப்பாகிய உண்மைச்சரியை கிரியை யோகமூன்றனையும் முறையே ஒழுகுவித்து அச் சிறப்பியல்புபொருந்திய தவத்தினாலே தன்சத்திகுன்றி நீங்குவதாகிய ஆணவமல பரிபாகம் வரச்செய்து அதனாலடையத்தக்க சத்திநிபாதத்தை விளக்கி அவ்விளக்கத்தினாலே இருவினையுஞ் சமமாகவறிவிலே யொப்பக் காணுமாறு செய்தருளுவர். இம்முறையே சகலாவத்தையில் நிகழ்வதனை:— "புகலுமிதில் வந்தபெரும் புண்ணியத்தால் வாய்ந்தமல பாகத்தாற்; றந்தசத்தி சேரவினை தாமொப்ப" எனவும்,



"அரிய வாணவத் தேயுமா கலந்தகஞ் சத்தி
யரிய தாஞ்சிவ புண்ணிய முடன்விரா யூட்டும்
பெரிய வாட்கணிப் பின்மல பாகமாம் பின்னர்
விரியுஞ் சத்திநி பாதம்பின் வினையொப்பு மேவும்" எனவும்,

"நெறிதரு முன்னமைச் சரியைகண் மூன்று நிரப்பியே தன்வலி தேய்ந்து
பரிமல பாகம் பயிற்றுபு சத்தி பதித்திரு வினைச்சம மாக்கி"

எனவும் பஞ்சாக்கரப் பஃறொடை முதலிய நூல்களிற் கூறியிருக்கின்றதனாலுமுணரலாகும். அன்றேல் அஃதங்ஙனமாகச்சுத்தாவத்தையில் நிகழும் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதத்தையே சகலாவத்தையில் நிகழ்ச்சியாகக்கொண்டு இடர்ப்படுவாரும் பலர். இன்னும் இதனை மாதவச் சிவஞானயோகிகள் சிவஞானசித்தியாருக்குச் செய்தவுரையில் நான்காஞ் சூத்திரத்து இறுதிச்செய்யுளில் "சத்திநிபாதத்துக்கு மூலமாகிய மலபரிபாகமும் இருவினையொப்புக்குமூலமாகிய சிவபுண்ணியமும்" எனக் கூறியிருத்தலுங் காணற்பாலது. இனி இறப்பிறவத்தானிருவினையொப்பெய்திய வான்மாக்கள் சுத்தாவத்தையைத்தலைப்படுவன. இச்சுத்தாவத்தையினியல்பு:—

"இருவினைச் செயல்க ளொப்பி னீசன்றன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே."

என்பதனானு முணரப்படும். சிவஞானபோதமுதலிய சித்தாந்தநூல்களிற் றொகுத்துக்கூறியிருக்கின்ற ஞானத்தில் ஞானமாகிய தசகாரியங்களையும் முப்பது அவதாரங்களாக வகுத்துக் கூறுவது "துகளறுபோதம்" என்னும் இச்சாதனநூல்.

துகள்-குற்றம். ஈண்டு மலவாசனையாகிய குற்றத்தையுணர்த்திற்று. துகளையறுக்கும்போதமென இரண்டாம்வேற்றுமைத்தொகை. என்னை? "உயர்ஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னு போதத் திருவருளொன்று." எனவும், "பவமதனை யறுக்கும் பாங்கினி லோங்கிய ஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்." எனவும், "தாவரும் பவத்தை வேரொடுங் களையுந் தக்கமெய்ஞ் ஞானம்" எனவுங் கூறுபவாகலின். துகளறுபோதம், மெய்ஞ்ஞானம், அருள்ஞானம், பரஞானம், உண்மைஞானம், சிவஞானம் என்பன ஒருபொருட்கிளவி. இந்நூற்கு விரிவாய நூலனதோவெனவாராயின் மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருக்கோவை

யாரே நாநூறு துறைகளாக இதனை விரித்துக்கூறுவதெனலாம். கோக்கப்பட்டமையிற் கோவை எனப்பட்டது. ஈரியல்பாடவிருபொருள் என்றும் பிரியாது ஒன்றாய் விரவிநிற்குமியல்பு கோவையெனப்பட்டது. கோவை அத்துவிதம் என்பன ஒருபொருட்கிளவி.

இனி, இருவினையொப்பெய்திச் சத்தாவத்தையைத் தலைப்பட்ட வான்மாத் தன்னைத்தரிசிக்கவியலாது மலவாசனையானாய மயக்கத்தால்

"எல்லாம் பொய்யென்றிங் கிருந்தேனு நானன்றே
நல்லாய் எனையறிந்தே நானன்றே—சொல்லாடு
நான்பிரம மன்றி நடுவே புணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று."

எனக்கூறி நானே பிரமமாவேனென முனைத்துநின்றவவதரத்து இதுகாறு முயிர்க்குயிராய் நின்றுணர்த்திய பிரானார் மானுடச்சட்டை சாத்தி ஞானாசாரியராகவும் எழுந்தருளிவந்து,

"உன்னறிவை நீயே யுணர்வையே யாமாகி
லின்னெடுநாட் பாசத் திலையாயே— புன்னறிவை
நீங்கா வறிவாகி நேரு மிரதபும்போ
லாங்கா ணரனா ரருள்."

எனத் தெருட்டியவிடத்து அம்முனைப்பொழிந்து தன்னைத் தரிசித்துப் பின் சுத்த சொப்பனத்தையெய்தித் திருவருளோடுநின்று ஐந்தொழிலுமாற்றுபவன் நானேயென முனைத்து நிற்கும். அந்நிலையினும் ஐந்தொழிலும் அருட்செயலன்றி உன்செயலன்றெனத் தெருட்டி அம்மயக்கையு மொழித்தவிடத்து மலவாசனையானாய மயக்கமும் அறவேயொழியச் சுத்தனாய் அருள் வழிநின்று சிவத்தைத் தரிசிக்கும். இது சுத்தத்திற் சுழுத்தி. பூதப்பழிப்பு முதல் ஞானதரிசனமிறுவாயாகவுள்ள பதின்மூன்றவதரங்களுஞ் சாக்கிரம். இதனுள் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம் என்னு நான்குமடங்கும். சொப்பனத்துப் பரைதரிசனமுதல் பரையிற் போகமிறுவாயாகவுள்ள நான்கவதரங்களுமடங்கும். ஈண்டு சிவரூபமும் ஆன்மதரிசனமும் ஒருங்கு நிகழ்வன. சுழுத்தியில் சுத்தபராயோகமுதல் பரையிலதீதமிறுவாயாகவுள்ள நான்கவதரங்களுமடக்குவன. ஈண்டு ஆன்மசுத்தியுஞ் சிவதரிசனமும் ஒருங்கு நிகழ்வன. பின், இந்நிலையினின்றுஞ் சிவத்தோடுசேர்ந்து திருவருளையுந்துறந்து ஏகமாய் இறைபணிநின்று பெறற்கரிய பேறாகிய ஆன்மலாபத்தை ஆன்மாவெய்தும். இது துரியம்.



இதில் சத்தாவத்தை முதல் பரமானந்தயோகம் இறுவாயாகவுள்ள ஆறவதரங்களுமடங்குவன. இது சிவயோகம். இனி, இந்நிலையையடைந்த ஆன்மா கேவலம்முதல் இதுகாறுமுடங்கியைந்துநின்று கைமாறுகருதாது செய்தருளிய எம்பிரானாது பெருங்கருணைத்திறத்தை அயராது உன்னுந்தோறு மெழுவதாகிய அன்பால் எம்பிரான்றிருவடியையடைந்து ஆண்டு சிவபோகத்திற் றிளைத்து என்றும் நீங்காது இன்புற்றிருக்கும். இது துரியாதீதம். இதில் பரமானந்தபோகம் பரமானந்தமேலீடு, பரமானந்தஅவசம் என்னு மூன்றுமடங்கும். இதுவே சிவபோகம். இதுவே ஆன்மாக்களது ஆதியந்தமாய நிகழ்ச்சி. கேவலத்துத் துன்புற்றுஞ் சகலத்துப் பிறந்திறந்துஞ் சுத்தத்து மயக்குற்றுமான்மாக்கள் நின்றவிடத்துப் பயின்றாடியும் தில்லையிற் கூத்தனாகியும் தென்பாண்டிநாட்டானாகி அல்லற்பிறவியறுப்பானாகியும் என்றும்பிரியாது உடனின்று கைமாறுகருதாது செய்தருளும் எம்பிரானாது பெருங்கருணைத்திறம் என்றும் மறவாது எம்மனத்திற் பொருந்த எம்பிரானே அருள்புரிவாராக. மறப்பின் "எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய் வில்லைச்—செய்ந்நன்றிகொன்றமகற்கு" என்பதூஉஞ் சிந்திக்கவேண்டுவது. இனி, இந்நூல் சிறந்தசெந்தமிழ்நடையில் யாக்கப்பட்டு இயற்றமிழ்ப்புலவர்க்கு இனியவிருந்தாவது. ஞானநூலையோதுவோரைசன்னெறியுய்த்து நவையறுத்திடுவது. நவிறொறும் நவிறொறுநன்னயம் பயப்பது. ஆய்தொறுமாய்தொறும் அருட்டுறை சேர்ப்பது. தெளிந்தவிடத்துப் பேரானந்தப் பெருவாரிதியிற் கடைந்தெடுத்த தெவிட்டாவின்பத் தெள்ளமுதளிப்பது.

இதனைத் திருவாய்மலர்ந்தருளிய திருவருட்டெய்வத் தேசிகமுதல்வர், கொற்றங்குடி உமாபதிசிவாசாரிய சுவாமிகள் சந்தானத்து வந்த சீகாழிச் சிற்றம்பலநாடிகளாகும் பெருந்தகையாவர். (இப்பெரியார் வேறு திருச்செந்தூரகவலியற்றிய பெரியார் வேறென முடிந்த முடிவாகக் கூறப்படுகின்றது.) இச் சிவகுருநாதன் மாயூரத்துப் புகைவண்டி நிலயத்துக்கு மேற்புறத்துள்ள சித்தர்வனம் என்னும் திருப்பதியில் தம் சீடர்களோடு நிட்டையிலமர்ந்தெழுந்தருளியிருக்குந் திருக்கோயில் இன்றும் சைவ அந்தணரானருச்சிக்கப்பெற்றுத் திருவருட்பொலிவோடு விளங்குகின்றது.

இந்நூல் மாதவச்சிவஞான யோகிகளால் பேரார்வத்தோடு மதிக்கப்பெற்று மேற்கோளாகவாளப்பட்டதாயின் அதன்பெருமை எம்மாற் சொல்லுந்தரத்ததோ?

இந்நூற்கு இதுகாறு மோருரையுங் காணப்படாமையானும், ஓருரையெழுதுவதே இந்நூலை நன்காய்ந்து தெளிந்துபயனெய்தற்கு வாயிலாகுமெனத் துணிந்தும், இதனைக்கற்குமார்வமுடைய மாணாக்கர்க்குப் பயன்படுமென நினைந்தும் இவ்வுரை எழுதப்பட்டது.

"புன்புலால் யாக்கை புரைபுரைகனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
னென்பெலா முருக்கி யெளியையா யாண்ட வீசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடுமயக்காந் தொடக்கெலா மறுத்தநற்சோதி
யின்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே னெங்கெழுந் தருளுவதினியே"

"நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
யல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து"

திருச்சிற்றம்பலம்

மெய்கண்டதேவன் திருவடி வாழ்க.

ஈசானசிவன்.

---

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| —1— | 25 | நள்ளிருளி | நள்ளிருளில் |
| —3— | 28 | யறநீக்கும் | யறமாற்றும் |
| —6— | 2 | புரைகனியப் | புரைபுரைகனியப் |
| ௧ | 15 | உண்யிமையி | உண்மையி |
| ௧௦ | 5 | பேரானந்த | பேரானந்த |
| ௧௧ | 15 | குற்றநீங்கும் | குற்றம்நீங்கும் |
| ௧௫ | 12 | அவற்றிகின்று | அவற்றிகின்றும் |
| ௧௮ | 12 | மலநீயா | மலம்நீயா |
| ௨௨ | 31 | பந்தத்திகின்று | பந்தத்தில்கின்று |
| ௨௭ | 13 | வன்றோதான் | லன்றோதான் |
| ,, | 28 | அருளிலே | அறிவிலே |
| ௨௯ | 20 | நிற்பவற்கேறு து | நிற்பவர்க்கேறு து |
| ௩௬ | 13<br>14<br>15 | அன்றி வேறு ஒன்றும் இல்லை—அவ்வி<br>றைவன துதிருவுருவமேயன்றி ஆனந்<br>தமெனப்படும் பொருள் வேறில்லை. | என்றுரைக்குமாகமநூல்—<br>எனச் சுருதி சிவாகமங்<br>கூறும். |
| ௪௦ | 17 | புகுந்தது அது ஆங்கு | புகுந்தது ஆங்கு |
| ,, | 23 | தருமடி | தருமாமடி |
| ௪௬ | 15 | வெளிபோகுங் | வெளியேபோகுங் |
| ,, | 31 | தானத்தி | தானத்தில் |
| ௪௮ | 28 | அந்தர்யாகஞ் | அந்தரியாகஞ் |

௪௯-ம் பக். 97-ஆம் செய்யுளுக்கு முகாமம் சரியை என்பதைச் சேர்த்துவாசிக்க.



திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

---

### நவாலியூர் மகா-ள-ள-ஸ்ரீ. க. சோமசுந்தரப்புலவர் இயற்றியது.

நீர்மலி செஞ்சடை நின்மல னக்காட்
பார்மலி மன்னுயிர் பவத்தொடர் பறுத்துச்
சீர்மலி சேவடிச் செங்கிழல் சேருபு
வாய்மலர்ந் தருளிய நூல்பல வவற்றுட்
சத்திநி பாதத் துத்தம ராஞோர்
முப்பொரு டெளிந்து பொற்புற வுதவிய
சைவசித் தாந்தத் தெய்வத நூலின்
முடிந்த முடிபெலாம் வளம்பெற விளக்கிப்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
வழிவரு ஞானத் தெளிவுறு பெரியோன்
ஐம்முகற் குரைத்த வறுமுகப் பெருமான்
செம்மலர் நோன்றாள் சேர்த்தியாட் கொண்ட
சிற்றம்பல நாடிக ளென்னு நற்றவன்
குறிய வாடியிற் பெரிய வாகிழல்
செறிதரு கொள்கையி னெறிவர வருளிய
இகலறு முண்மைத் துகளறு போதம்
பக்குவ ருணர்ந்து நற்கதி யெய்தப்
பொற்புறு நல்லுரை யற்புத னுரைத்தான்
பொன்னிலங் காபுரிச் சென்னியென் றுரைக்க
மன்னுயாழ்ப் பாண வளநக ரொருசார்
செந்நெற் கழனியுங் கன்னற் படப்பையும்
தாள மரும்பி மரகதங் காய்த்துப்
பவளம் பழுக்குங் கமுகஞ் சோலையுஞ்

தேமா வளனார் தீஞ்சுளைப் பலவும்
வாமா முகனென வான்குலை தூக்கும்
வன்னக் கதலியும் மன்னிய வளஞ்சேர்
மன்னவர் மதித்த தன்னிகர் சிறப்பின்
அச்சுவே லிப்பதி மெச்சிடு பழமையும்
திருவுங் கல்வியுஞ் சிவநெறி யொழுக்கமும்
மருவிய சைவ வேளாண் மரபினில்
வந்தவ தரித்த இந்திரச் செல்வன்
சின்னத் தம்பிவேள் செய்தவ மதனால்
வள்ளி நாயகி மணிவயிற் றுதித்த
எள்ளருஞ் சிறப்புடை வந்தல் தொல்லியல்
கந்தவனத் துக் கடவுட்கற் பகத்தின்
சுந்தரச் சேவடி துதித்திடு மன்பன்
அத்திருக் கோயி லாதீன கர்த்தன்
வேன்மயில் வாகன விற்பன்னன் றன்பால்
இலக்கண விலக்கியங் கலக்கற வுணர்ந்தோன்
சைவசித் தாந்த மெய்ந்நெறி நன்னூல்
கைவர வுணர்ந்த மெய்வரு குரிசில்
தெய்வத் தீக்கை உய்வுறப் பெற்றே
அகத்தும் புறத்தும் அரனடி யருச்சனை
உகப்புடன் புரியு முத்தமன் மிகப்புகழ்
திக்கம் செல்லைய வேளென வெங்குந்
தக்க தன்பெயர் தருதியின் வைத்தோன்
தேசார் தீக்ஷா நாமந் திருமலி
ஈசான சிவனென வியம்பும்
மாசி லருங்கலை வல்ல பண்டிதனே.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# துகளறு போதம்.

## மங்கல வாழ்த்து.

சிவஞானபோதம் முதலிய சித்தாந்த நூல்கள் தசகாரியங்களாகத் தொகுத்துக் கூறும் ஞானத்தில் ஞானமாகிய நிட்டையினியல்பை முப்பதவதரங்களாக வகுத்துரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், சாக்கிரத்தேயதீதத்தைப்புரியுந் தமக்கு இடையூறுசிறிதுமணுகாமை உணர்ந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணாக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்:—

எல்லாம்பொய் யென்றே எனைக்காட்டி யெம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொல்லி—நல்லதொரு
அற்புதமா மானந்த மாங்கருத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் தாளிணையென் கண்.

இதன்பொருள்: எம்பிரான்—கேவலம் சகலம் இரண்டினும் உயிர்க்குயிராய் உள்நின்றுணர்த்திய பிரானார், இருவினையொப்பெய்திச் சத்தாவத்தையைத் தலைப்பட்ட அவதாரத்து மானுடச்சட்டைசாத்தி ஞானாசாரியராக எழுந்தருளிவந்து, எல்லாம் பொய் என்று காட்டி—மண்முதற்கலையீறாகிய தத்துவங்களனைத்தும் அழிதன்மாலையவாய பொய்ம்மையையுடையனவெனக் காட்டி, எனைக்காட்டி—பின்னர் இத்தத்துவங்களினின்று நீங்கிய யானே பிரமமாவேனென முனைத்தவழி, அங்ஙனநீங்கும் நல்லறிவுடையையாயின் இந் நீடூழிகாலம் பிறவிப் பெருங்கடலில் மூழ்கி வருந்தாய். அதில் மூழ்கி வருந்திய உன்னை இந்நிலையிற் கொடுவந்து விடுத்தது உன்னை என்றும் பிரியாது உடனாய் நின்றருள்புரியும் இறைவனருளேயெனத் தெருட்டியவிடத்து, அந்நிலையினின்று நீங்கிச் சுத்த சொப்பனத்தையெய்தி என்னைத் தரிசித்த யான், இத்திருவருளோடுகூடி ஐந்தொழிலாற்றவோர்

யானே என முனைந்தவிடத்து, காச்சிய இரும்பினிடத்துச் சுடுதற்றொழிலைச் செய்வது தீயேயன்றி இரும்பல்ல. அதுபோல் உன்னோடு உடனாய் நிற்கும் திருவருளே உன் பொருட்டு ஐந்தொழிலுஞ் செய்வதெனத் தெருட்டிய வழி முனைப்பொழிந்து தவண்டு சத்தியடைய அந்நிலையில் என்னைச் சுத்தனாக்கிக்காட்டி, சொல்லாத பேர் அறிவு தான்சொல்லி—சுருதி சிவாகமங்களில் விதிமுகத்தாற் கூறாது அநுபவவாயிலா னுணர்த்துமாறமைந்த பேரறிவெனப்படும் மெய்ஞ்ஞானத்தை அவதாரங்கடோறு மனுபவத்தோடொட்டியுணர்த்தி, நல்லது ஒரு அற்புதமாம் ஆனந்தம்—பெருநன்மை எனப்படுவதும், ஒப்புயர்வில்லாததும், இத்தன்மைத்தெனச் சொல்லவியலாத பெருமையுடையதுமாகிய பரபோகத்தை, ஆங்கு அருத்தல் செப்புதற்கு—அந்நிலையில் ஊட்டியருளுதலைக் கூறுதற்கு, கற்பகத்தின் தாள் இணை என கண்—பொற் பொதுவின்மேற் றிருக்கோபுரத்துத் தென்புறத்துக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்குங் கற்பகவிநாயகக்கடவுளது இரு திருவடிகளும் என் அறிவினிடத்தவாக. காட்டி என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

கண்-அறிவு. ஏ-தான், அசைகள்.

எல்லாம் பொய்யென்று காட்டி என்றதனால், பூதப்பழிப்புமுதல் ஞான தரிசன மிறுவாயாகப் பதின்மூன்று அவதாரங்களும், எனைக்காட்டி என்றதனால், பரைதரிசனமுதல் பரையிலதீதம் இறுவாயாக எட்டவதாரங்களும், ஆனந்தமாக்கருத்தல் என்றதனால் சுத்தாவத்தைமுதல் பரமானந்த அவசம் இறுவாயாக ஒன்பது அவதாரங்களுங் குறிப்பாற் கூறியவாறுபெறப்பட்டது. இங்ஙனம் நூனுதலிய பொருளெலாங் குறிப்பாற் றன்னகத்தடக்கி நிற்றல் மங்கலவாழ்த்துக் கிலக்கணமாகும்.

## பாயிரம்.

1. பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறாங்—கதிவழங்கும்
மெய்கண்டான் சந்தான மேவிச் சிவானந்தங்
கைகண்டார் காணார் கரு.

இ—ள்: பதி பசு பாசம் தெரிந்து—இறை உயிர் மலம் எனப்படும் முப்பொருள்களின் இலக்கணங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, அந்தப் பாச விதிவழியை வென்று—ஞானத்தை மறைத்து அஞ்ஞானவழியிற் கொடுசெல்லும் பாசத்தனாகிய வழியை அறவேயொழித்து, அதனின் வேறாம் கதிவழங்கும்—அந்தப் பாசவழியின் வேறாகிய பரபோகமாகிய வீட்டைப் பயக்கும், மெய்கண்டான் சந்தானம் மேவி—மெய்கண்டதேவநாயனாரது சந்தானாசாரியரை அடைந்து, சிவானந்தம் கைகண்டார்—சிவானந்தத்தைப்பயக்கும் நிட்டை சித்திக்கப்பெற்றுச் சிவபோகத்தழுந்தினோர், கரு காணார்—அன்னையின் கருப்பாசயத்திற் புகார். பிறப்பிலர் என்றபடி.



சடசித்துப் பிரபஞ்சமாகிய எல்லாப்பொருளையுந் தமது சத்தி சந்நிதி சங்கற்ப மாத்திரையிற் படைத்தளித்தழிக்குந் தனிமுதல் என்பார் பதி எனவும், ஆன்மாக்கள் அநாதியே மலத்தொடக்குள்ளனவென்பார் பசு எனவும், தம்மோடு என்றும் பிரியாது உடனாய் நின்று உணர்த்தியருளும் பிரானை ஆன்மாக்களறிந்து பேரானந்த வநுபவத்தை யெய்தவொட்டாது ஞான திரோதகமாய் மறைத்து நிற்பதென்பார் பாசம் எனவுங் கூறினர். ஞான நூலைக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவழியன்றிப் பாசத்தானாய வழியைத் துறத்தல் அரிதென்பார் பாசவிதிவழியை வென்றெனவும், அங்ஙனம் விதிவழியைவென்றவிடத்தும் நன்னெறியைக்காட்டும் மெய்கண்டதேவநாயனாரது சந்தானாசாரியரையடைந்து ஞானோபதேசம் பெற்று ஞான நிட்டையெய்தியவழியே பரபோகஞ்சித்திக்கும் பிறவியொழியுமென்பார் அதனின் வேறாம் மெய்கண்டான்சந்தானம்மேவிச் சிவானந்தங்கைகண்டார் காணார்கரு எனவுங்கூறினர். ஞானத்தானன்றி வேறெவ்வாற்றானும் பரமுத்தியடைதல் கூடாதென்பது ஒருதலை. அஃதங்ஙனமாக, இந்நூல் நிட்டையினியல்பும் அதனையெய்தும் வழியும் அந்நிட்டையே பரமுத்தியைப் பயப்பதெனவும் இச்செய்யுள் நூற்பயன் கூறியவாறு காண்க.

2. உற்ற சரியை யொழியாத நற்கிரியை
குற்ற மிலாயோகக் குறிநெறியும்—முற்றிப்
பிறந்தார்க டாமறியப் பேசுகே னன்றிப்
பிறந்தா ரறியாத பேறு.

இ—ள்: உற்ற சரியை—வைதிகசைவ சுத்தாத்துவித சித்தாந்த சமயமே உயிர்க்குறுதி பயக்குஞ் சமயமெனத் தெளிந்து அதனை அடைந்து ஞான நூலைக்கேட்டலாகிய சரியையும், ஒழியாத நற்கிரியை—அங்ஙனங்கேட்டபொருளை இடையறாது சிந்தித்தலாகிய கிரியையும், குற்றமிலா யோக குறிநெறியும்—பரமுத்தியைப்பயவாது பதமுத்தியைப் பயக்கும் தடத்த தியானமொழிந்த சொரூபத் தியானமாகிய தெளிதலெனப்படும் யோகமும், முற்றிப் பிறந்தார்கள் தாம் அறிய—மேற்கூறிய மூன்றும் முடிந்து நிட்டை ஒன்றுமேயெய்துமாறு பிறந்த பக்குவர்களே அறியுமாறு, அன்றிப் பிறந்தார் அறியாத பேறு பேசுகேன்—சரியை முதலிய மூன்றனையும்முடியாத அபக்குவர்களறியாத பேறாகிய நிட்டையினியல்பை யான் சொல்வேன்.

"புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழி உழன்றும் புகலு மாச்சிரம—அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும் அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்துஞ்— சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத் திறத்தடைவர்" என்றபடி சித்தாந்தசைவத்தையடைந்து சித்தாந்த நூலைக் கேட்டலாகிய சரியையை என்பார் உற்றசரியை எனவும், அவ்வாயி லாற் கேட்ட முப்பொருள்களினிலக்கணங்களையும் இடையறாது சிந்தித்த லே தெளிதற்கேதுவாகுமென்பார் ஒழியாத நற்கிரியை எனவும், தெளிந்த விடத்துப் பாமுத்தியைப்பயக்கும் அகண்டாகார நித்த வியாபக சச்சிதா னந்த சொரூப பரசிவத்தைத் நியானித்தலாகிய ஞானயோகத்தைச் செவ்வ னே முடித்தென்பார் குற்றமிலாயோகக் குறிநெறியும் முற்றி எனவும், அந் நெறி முடித்துப் பிறந்தவர்களே இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகளென் பார் பிறந்தார்கள் நாமறியப் பேசுகேன் என்றும், சரியை முதன் மூன்றை யும் முடியாது பிறந்தவர் இந்நூல் கேட்டற்கு அதிகாரிகளல்லர் என்பார் அன்றிப்பிறந்தார் அறியாதபேறு எனவுங் கூறினர். இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகளது இலக்கணங் கூறியபடி. அதிகாரிகளது இலக்கணம் இன்றி யமையாமையை உணர்த்துவார் எதிர்மறையானுமதனை வற்புறுத்திக் கூறினர்.

3. எல்லாங் கழற்றி யிறைவ னுடன்கலக்க
வல்லார்கள் கண்ட வழிபலவுஞ்—சொல்லரிய
தம்பிரான் றாள்க டணவாத வாதனையு
மெம்பிரான் றந்தா னெமக்கு.

இ—ள்: எல்லாங் கழற்றி—மண்முதல் நாதமீறாகிய தத்துவங் களையும் நான் எனது என்னும் முனைப்பையும் வென்று, இறைவனுடன் கலக்க வல்லார்கள் கண்ட வழிபலவும்— பரசிவத்தோடு இரண்டறக் கலக்கும் பரிபாகமுடைய பெரியோர்கண்ட பல வழிகளையும், சொல்லரிய தம்பிரான் தாள்கள் தணவாத வாதனையும், இத்தன்மைத்தென்று சொல்லு தற்கரிய தம்பிரானுடைய திருவடிகளை அயராமையானுய வன்பானெய்தும் பரமானந்த பரபோகத்தைப் பயக்குஞ் சகசநிட்டையினையும், எம்பிரான் எமக்குத் தந்தான்—எம் ஞானசாரியராகிய சிவமே எம்பொருட்டு எமக்கு உணர்த்தியருளினர்.

உண்மைஞானம் பலதிறப்படாது என்று மோரியல்பிற்றென்பதூஉம் அதன்வழியே சிவானுபூதிச்செல்வராய் நிட்டை கைவரப்பெற்ற பெரி யோர் கண்ட வழிகள் பலவும் என்பதூஉம் உணர்த்துவார் எல்லாங்கழற் றியிறைவனுடன் கலக்க வல்லாரகள் கண்டவழி பலவும் எனவும், நிட்



டையினியல்பை அநுபவவாயிலா னுணர்த்தியருளினர் என்பார் தம்பிரான் றாள்கடணவாதவாதனையும் எனவும் தமக்கே அன்றி தம்மை யொத்தபக்கு வர்கள் எல்லோர்க்கும் பயன்படுமாறு உணர்த்தியருளினர் என்பார் எம் பிரான்தந்தான் எமக்கு எனவும் பன்மையாற் கூறியருளினர். தணவாமை ஈண்டு அயராமையை உணர்த்திற்று. உம்மைகள் எண்ணுப்பொருளின. எம்பிரானென்றவிடத்துத் தேற்றேகாரம் விரித்துரைக்கப்பட்டது.

## பூதப்பழிப்பு.

(பூதங்கள் சடமேயென இழித்துக் கூறுதலின் இப்பெயர்த்து.)

4. மண்ணுக் குயிராகி வந்தூரத்துத் தான்றரிக்கு
மெண்ணு முரோ மாதியிதன் காரியமாம்—கண்ணிற்
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானுந்
துறவுமுதற் பூதத் தொழில்.

இ—ள்: மண்ணுக்கு உயிராகி வந்து ஊத்து தரிக்கும்—நிலத்தின் குணமாயமைந்தது ஊத்துந்தரித்தலாம், எண்ணும் உரோமாதி இதன் காரியம்—மயிர்என்பு தோல்தசை நாம்பு எனஎண்ணப்படும் ஐந்தும் நிலத் தின் காரியங்களாம், கடினமாய்ப்பேசியது பிறவுமாம்—கடினத்தன்மையை யுடைய பிறபொருட்களுமாம், முதற் பூதத் தொழில் துறவு—ஆதலின் இது சடமாய் அழியுந்தன்மையது. இக்காரணத்தால் மாணவகனே நிலத்தின் தொழில் சடத்தன்மையது உயிர்த்தன்மையதன்றெனத் துறக்குதி.

உயிர் ஈண்டு குணத்தை உணர்த்திற்று. துறவு-தொழிற்பெயர். துறத் தல் சாலும் என்றபடி. தான், ஆம். அசை.

5. நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கினீ ராதி பகர்கருமம்—கார்க்குரிய
வெள்ள முதலாகும் மெய்யுணரி னப்புத்தா
னள்ள விடப்படா தாம்.

இ—ள்: நீர்க்கு உயிராய் நின்று நெகிழ்ந்து குளிரும் — நீருக்குக் குணமாவது நெகிழ்ந்து பதஞ் செய்தல், பார்க்கில் பகர் கருமம் நீர் ஆதி— ஆராயின் நீர் உதிரம் சுக்கிலம் மூளை மச்சை என்னும் ஐந்தும் அதன் காரி யங்களாம், கார்க்குரிய வெள்ளம் முதலாகும்—முகிலினிடத்துள்ள நீர்முத லிய எனைய நீராயுள்ளனவும் அதன் காரியங்களாம், மெய் உணரின் அப்பு அள்ளவிடப்படாது— நீருக்குச் சவை சிறந்தகுணமென்பனவும் அதன் செயலையுமுண்மையி னுணர்ந்தால் அக்குணம் உயிரைத் திநெறியினீர்த்துச் செல்லவிடப்படாது. அதனை அறிகுதி.

நீரின் குணமாகிய சுவை, பயிற்சியைத்தானுடைய வாசனையான் அற்றம் பார்த்து ஆன்ம அறிவை மயக்கித் தன்வழியினீர்த்துச்சென்று பிறவிக்கு வித்தாகும் ஆகாமிய கன்மத்தை விளைத்து விடுதலின் அதனைத் தடுத்தல் ஒருதலையான் வேண்டப்படும் என்பார் மெய்யுணரி னப்புத்தானன்னவிடப்படா தாம் எனக்கூறினார். ஏகாரங்கள் இரண்டு தான், ஆம் என்பனவும் அசைகள்.

6. வன்னிக் குயிராகி வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னு பசியாதி பயில்கருமம்—மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறாகி நிற்குந்
துளக்கமிலாத் தேயுத் தொழில்.

இ—ள்: வன்னிக்கு உயிராகி வந்து சுட்டு ஒன்றுவிக்கும்—தீயின் குணம் சுட்டொன்றுவித்தலாம், பயில் கருமம் பன்னும் பசி ஆதி— தீயின் காரியமாகச்சொல்லப்பட்டவை ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் சோம்பல் என்னும் ஐந்துமாம், மன்னும் விளக்காகிப் பந்தமாய் வேறாகி நிற்கும்—நிலைபெற்ற விளக்காகியும் பந்தமாகியும் ஏனைய தீயாகியும் நிற்கும், துளக்கம் இலா தேயுத்தொழில்—இவையே துளக்கமில்லாத தீயின் தொழில்களாம்.

துலக்கம் துளக்கமென எதுகைநோக்கி நின்றது. உடலினிகழுந் தீயின்றொழில் காட்சிப்புலனாகாமையின் துலக்கமிலா எனக்கூறினார்.

7. சேடப் பிரித்துத் திரட்டுவிக்குஞ் செய்கரும
மோடன் முதலோவா வுயிர்மருந்து—நாடிலிவை
யல்லவாம் வாயு வருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து.

இ—ள்: வாயு தேடப் பிரித்துத் திரட்டுவிக்கும்—வாயுவின் குணம் தேடுமாறு சலித்துத் திரட்டுவதாம், செய்கருமம் ஓடல் முதல்—இதன் காரியங்கள் ஓடல் இருத்தல் கிடத்தல் நடத்தல் தத்தல் என்னும் ஐந்துமாம்; நாடில் ஓவா உயிர் மருந்து இவை அல்ல —உண்மையை ஆராயின் அனாதியே மலபந்தமுற்ற உயிர்க்கு அப்பந்தமாகிய நோயை நீக்கும் மருந்தாய் என்றுமுடாநின்று தொழிற்படுத்தி நன்னெறியிற் சேர்ப்பது இவ்வாயுக்களல்ல, வாயு அருட்குருவால் காண்பது அன்றி—அங்ஙனஞ் செய்யும் வாயுவை திருவருட்டேசிகன் வாயினானுணர்வதன்றி, துணிந்து சொல்லவாராது— ஏனையோரானித்தன்மைத்தென்று தெளிந்துசொல்ல வியலாது.

சதசத்தாகிய ஆன்மா வாயுவைஇயக்கி அதனைத் துணையாகக்கொண்டு தன் கருமங்களைச் செய்தவழியும் அகண்டாகார நித்த வியாபகமாய் நின்று உலகை நடாத்துமிறைவன் அவ்வருட்செயலை நீங்கியவிடத்துச் சித்தப் பிர



பஞ்சமுஞ் செயலற்றுச் சடமாய் வாளாகிடப்பதன்றி வேறெவ்வாற்றானு மறிவெய்தித் தொழிற்பட்டு நன்னெறியையடையாதென்பார் ஓவாஉயிர் மருந்து நாடில் இவை அல்ல எனவும், கருணைக்கடலாகிய இறைவனது தன்மையை ஞானாசாரியர் வாயிலானுணர்ந்து அநுபவத்திற் காண்டலேயன்றி வாக்கு மனாதீத கோசரமாய் நிற்பதனைச் சொல்லாற் சொல்ல முடியாது என்பார் சொல்லவாராதே துணிந்து எனவுங் கூறினார். "இன்ன தன்மைய னென்றறியொண்ணாவெம்மானை" என்பதுநோக்குக. உயிர் வாயுவைஇயக்க உயிரை இறைவனியக்கித் தொழிற்படுத்தி நன்னெறியிற்சேர்த்துத் தன்திருவடிப்பேறாகிய பரபோகப்பெருவாழ்வையுங் கொடுத்தருள்வர்.

"என்னில் யாருமெனக்கினி யாரில்லை-என்னி லும்மினி யானொருவன்னுளன்- என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக் - கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே" என்னுந்தமிழ்மறையு நோக்குக.

இந்நான்கு பூதங்களின் கூட்டரவால் ஓர் உணர்வுபிறக்கும். அதுவே உயிர். அதைவிட உயிரென வேறொன்றில்லையென்னுந் தேகான்மவாதியை மறுத்தபடி.

8. இரந்தரமாய் நின்றே யிடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கில்—விரிந்த
கருமமாய் வேறாகுங் காணலா முண்மைக்
குரவனா லென்றே குறி.

இ—ள்: வானம் இரந்தரமாய் நின்று இடங்கொடுக்கும்—ஆகாயம் நிரந்தரமாய்நின்று ஏனையவற்றிற்கு இடங்கொடுக்கும், பார்க்கில் பரந்த குரோதம்முதல் விரிந்த கருமமாய் வேறாகும்— பார்க்குமிடத்து காமம் குரோதம் உலோபம் மதம் மாற்சரியம் என்னும் ஐந்துகுணங்களும் ஏனைய பரந்த தன்மையையுடைய தூரத்தைக்குறிக்கும் எல்லைகளாயும் பிறவுமாகும், உண்மைக் குரவனால் காணலாம் என்று குறி—இதனை உண்மையை உணர்த்த வல்ல ஞானதேசிகன் வாயிலானுணரலாமென அறிகுதி.

சூக்கும பூதசத்தியில் நிலம் முதல் நாதமீறாகிய தத்துவங்கள் முறையே பிரணவத்திலொடுக்கப் பிரணவமும் பராசத்தியிலொடுங்கக் காண்கின்றோம். அந்நிலையினமர்ந்துள்ள ஆகாசமாகிய வெளியே என்றும் ஒரியல்பாய் அழியாதிருக்கும் வெளி என்பதை உண்மையை உணர்த்தவல்ல ஞானதேசிகன்வாயிலாகவே அநுபவத்திற் காண்டல் கூடும் என்பார் காணலா முண்மைக் குரவனாலென்றே குறி எனக்கூறினார். ஏகாரங்கள்-அசை.

இதனை "அருமறைச் சிரத்தின் மேலாஞ் சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம்பலம்" என்பதனானுமறிக. இவ்வைந்து பூதங்களும் சடமா யழியுமியல்பின, ஆதலின் அவற்றைத் துறத்தி.

9. வட்ட மறுகோணம் மாயாத முக்கோணம்
இட்ட பிறைசதுர மேவடிவம்—எட்டரிய
வேதன்மான் மிக்க விடையோன் மகேசனுடன்
ஆதி அதிதெய்வ மாம்.

இ—ள்: வட்டம்—ஆகாயத்தின் வடிவம் வட்டம், அறுகோணம்—வாயுவின் வடிவம் அறுகோணம், மாயாத முக்கோணம்— தேயுவின் வடிவம் அழியாதவிளங்கும் முக்கோணம், இட்ட பிறை- அப்புவின் வடிவம் எம்பிரான் திருமுடியினணிந்த பிறை, சதுரம்—பிருதுவியின்வடிவம் சதுரம், அதிதெய்வம்-இப் பூதங்கட்கு அதிதெய்வமாவன, வேதன் மால் மிக்க விடையோன் மகேசன் உடன் ஆதி—எதிர் நிரசிலையாகப் பிரமா திருமால் பெருமையையுடைய இடபவாகனராகிய உருத்திரன் மகேசனோடு சதாசிவமூர்த்தியுமாகும்.

தடத்தவடிவங்கட்கு முதலாயுள்ளவர் சதாசிவமூர்த்தியாகலின் ஆதி என்றார்.

10. இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
அப்படிநீ நில்லாம லாங்கறிந்திட்—டெப்படியுந்
தோன்றாமற் றேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தா
லூன்றா யதுவா முடம்பு.

இ—ள்: இப்படி பூதத்துஇயல்புதனை தெளிந்து—மேற்கூறிய இலக்கணங்களே பூதங்களினுண்மைத் தன்மையென ஐயந்திரிபற உணர்ந்து தெளிந்து, அப்படி நீ நில்லாமல்—தேகமே ஆன்மாவெனநில்லாமல், ஆங்கு அறிந்திட்டு— அந்நிலையில் அவ்வுண்மையை அறிந்து, தேசிகன் முன் சொன்னபடி—ஞானதேசிகன் முன் உனக்குச்சொன்னபடி, எப்படியும் தோன்றாமல் கண்டு இருந்தால்— எவ்வழியானுமது தேகமே ஆன்மாவெனத் தோன்றாது சடமெனக்கண்டுஇருப்பாயாயின்; உடம்பு ஊன் றாயது ஆம்—உன்னுடம்பு புன்புலால் யாக்கை என்னு மியல்புடையதென்பதை உண்மையின் உணர்வாய்.

தேசிகன் முன்சொன்னபடி கண்டிருத்தல் அரிதென்பதை உணர்த்துவார் தேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தால் எனக்கூறினர். உன்னுடல் புலாற் பொதியாய சடமாகும் ஆதலினதனைத்துறத்தி என்பதாம்.



## பொறிபுலனுணர்தல்.

பொறிகள் சடமாதலைத் தெருட்டி அவற்றைத் துறக்கும் வழியை உணர்த்துதலின் இப்பெயர்த்து.

11. பூத மிடமாய்ப் பொருந்தும் பொறிபுலன்கள்
நாதனரு ளாலேநீ நாடியவை— ஏதமெனத்
தத்த முருவுணரத் தானகலு மப்போதே
சத்தமுத லாதிவிடுந் தான்.

இ—ள்: பூதம் இடமாய்ப் பொருந்தும் பொறி புலன்கள்—ஐம்பூதங்களிடமாகப் பொருந்தும் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளையும், அவற்றின்வாயிலாகக் கந்தம் இரசம் உருவம் பரிசம் சத்தம் என்னுமைந்தையு முணரும்புலன்களையும், நாதன் அருளாலே நீ நாடி—மாணவகனே நீ இறைவன் திருவருளைத் துணையாகக்கொண்டு ஆராயின், அவை தம் தம் உரு உணர—அப்பொறிபுலன்களின் வடிவத்தை ஒன்றொன்றாக உண்மையினுணர, அவை ஏதம் என அகலும்—அவை சடமாய் அழியும் பொருளாய்க் காணப்பட்டு உன்னைவிட்டு நீங்கும், அப்போது சத்த முதலாதிவிடும்—அப்பொழுது சத்தம் முதலிய பஞ்சதன்மாத்திரைகளும் உன்னை விட்டு நீங்கும்.

திருவருள் துணையாகக்கொண்டு நாடியவழியே அவை சடமெனக் கண்டு துறத்தல் கூடும் அல்லுழிக் கூடாதென்பார் நாதனருளாலே நீ நாடியவையேதமெனவுணர எனக்கூறினர். இந்திரியங்கட்குருவமாவது சத்தம் முதலிய ஐந்தும் ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களோடும் ஒருங்குகூடிய அவதாரம்.

ஏகாரம், முன்னையது அசை; பின்னையது தேற்றம். பிரிநிலையுமாம். தான் இரண்டும் அசை.

12. சத்தாதி யைந்தினையுஞ் சந்தித்து நீயகல
அத்தால் வரும்பயன்க ளாங்ககலு—மெத்தாலுங்
காணும லவ்விடயங் கைகழலக் கைகழலு
நாணுப் பிறப்பின் நவை.

இ—ள்: சத்தம் ஆதி ஐந்தினையும் நீ சந்தித்து அகல-சத்தம் முதலிய ஐந்தினையும் ஆகாயம்முதலிய பூதங்களின் குணமென நீ தனித் தனி கண்டு அவற்றினின்று நீங்க, அத்தால்வரும் பயன்கள் ஆங்கு அகலும்—அச்சத்தமுதலியவற்றால் நீ அடையும் போகங்கள் அந்நிலையில் உன்னை விட்டு நீங்கும், எத்தாலும் நாணுப் பிறப்பிறப்பின் நவை— எக்காரணத்தாலும் வெட்கத்தைப்பயவாத பிறவிக்கேதுவாகிய ஆசை எனப்படுங்குற்றத்தையுடைய ஆசாமியவினை, அவ்விடயம் எத்தாலும் காணாமல் கைகழல— ஐம்பொறிகளானுய

அநுபவங்கள் எக்காரணத்தாலும் புலனாகாது கழன்று நீங்கியவழி, கழலும்—உன்னைவிட்டு அறவே ஒழியும்.

ஐம்புலன்களாலாய நுகர்ச்சியைத் துறந்தவிடத்துப் பிறவிக்கேதுவாகிய ஆகாமியகன்மத்தை ஈட்டாது பேரானந்தவனுபவத்திற் றலைப்பட்டுச் சிவபோகமாகிய பரமசாயுச்சியத்தை அடையும் என்பதனை,

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத் தமுதே
யூறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் றெளிவே சிவபெரு மானே திருப்பெருந் துறையுறை சிவனே
யீறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த வின்பமே யென்னுடை யன்பே."

என்னுந் திருவாசகத் திருமறையினுங் காண்க.

13. வாக்காதி யத்துடனே நீங்கவச னாதிவிடு
நீக்காத வுட்கரண நீங்குமே—தாக்கி
மனமுதலாக வந்தவந்த போது
தனது செயலுணரத் தான்.

இ—ள்: வாக்காதி அத்துடன் நீங்க வசனம் ஆதி விடும்— ஐம்புலன்களுந் தந்தொழிலின்றும் நீங்கியவிடத்து அவற்றின்வழிநின்று தொழிற்படும் வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் எனப்படுங் கன்மேந்திரியங்களுந் தத்தஞ் செயலற்றொழிக்க அவற்றின் காரியமாகிய வசனம் கமனமாதியவு நீங்கிவிடும், நீக்காத உட்கரணம் நீங்கும்—உன்னால் நீக்கப்படாத மனம் முதலிய அந்தக்கரணங்களும் வாயிற்காட்சியின்மை யானவற்றொடொய்து மானதக்காட்சியின்றித் தாமேநீங்கும், தாக்கி மனமுதலாக வந்த வந்த போது—பண்டுபயின்ற வாசனையாற்றூக்கி மனம்முதலிய அந்தக்கரணங்கள் மூளைத்தெழும்பொழுதெல்லாம், தனதுசெயல்உணர நீங்கும்—அவ்வ தொழிற்படுமுறையை ஒன்றொன்றாகக்காண அவையுநீங்கும்.

நீங்கும்என்பதனை இரண்டிடத்துங்கூட்டுக. இச்செய்யுளில்அந்தக்கரண சுத்திக்குத் தோற்றுவாய் கூறியபடியுமாம். இது இந்திரியான்மவாதியை மறுத்தபடி.

## அந்தக்கரணசுத்தி.

அந்தக்கரணங்களைச் சடமெனக்கண்டு அவற்றினின்று நீங்குமுபாயங் கூறுதலி னிப்பெயர்த்து.

14. மன்னு மகார மனஞ்செலுத்தும் புந்தியினை
யுன்னு முகார முபகரிக்கும்—முன்னுரு
மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்திவிடு
நீங்காதசித் தம்விந்து நேர்.



இ—ள்: மன்னும் மகாரம் மனஞ்செலுத்தும் — நிலைபெற்ற மகாரம் பந்தித்தலைச்செய்யும் மனத்தைச்செலுத்தும், உன்னும் புந்தியினை உகாரம் உபகரிக்கும் —தெளிதலைச்செய்யும் புத்தியை உகாரஞ்செலுத்தும், முன்னுறும் ஆங்காரந்தன்னை அகாரம் செலுத்திவிடும்—இஃது யாதோ அதனை அறிவேனென மூளைத்தெழும் ஆங்காரத்தை அகாரம் செலுத்தும், நீங்காத சித்தம் விந்து-இடையீடின்றிச் சிந்திக்கும் சித்தத்தை விந்து செலுத்தும், நேர்—இதுவே உடன்பாடாயுள்ளது. அதனை அறிகுதி.

15. அந்தக் கரண மகல வதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே—பந்திக்குஞ்
சித்த மலமறுத்துத் தீர வுனக்கேற
வொத்த படியே யுணர்.

இ—ள்: அந்தக்கரணம் அகல-அந்தக்கரணங்கள் தத்தஞ்செயலற்றுச் சடமாய்நீங்க, அதில் கூடும் தொந்த கலாதி துரிசு அறும்-அவற்றோடு பந்தமாய்நின்று தொழில் நடாத்தும் கலைவித்தை அராகங்களாலுறுங் குற்றநீங்கும். பந்திக்கும் சித்தமலம் அறுத்துத் தீர— உன்கல்லுணர்வை மறைக்கும் சித்தமாதிய அந்தக் கரணங்களாலுறிய பந்த நீக்கப்பட்டொழிய, உனக்கு ஏற ஒத்தபடிஉணர்— நீ நன்னெறிக்கட்சேறற்கு அமைந்தபடி அந்தக்கரணங்களையுஞ் சடமெனக்கண்டு துறக்குதி.

இது அந்தக்கரண வான்மவாதியை மறுத்தபடி.

"பழவினைகள் பாறும் வண்ணம்—சித்தமலமறுத்துச் சிவமாக்கி" என்பது நோக்குக. கலாதிஞான நிராகரணத்திற்குத் தோற்றுவாய் கூறியபடி.

## கலாதிஞான நிராகரணம்.

கலாதியாலாய ஞானமும் உண்மையன்றெனத் துறத்தற்கு உபாயங்கூறுதலின் இப்பெயர்த்து.

16. பொங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்கு கலையாதி தருஞான—மீங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போத மொன்றிரண்டுந்
தூங்குபடி நில்லாய் துணிந்து.

இ—ள்: பொங்குபுலன் அருந்த போதம்தரும் மாயை தங்குகலை ஆதி தருஞானம்—பொலிவினையுடைய புலன்கள்வாயிலாக இம்மைப்பயன்களை அருந்துமாறு உனக்கு விபரீதஞானத்தைப் பயப்பது அசுத்தமாயையினின்றுந் தோன்றிய கலைவித்தை அராகங்களாற் றரப்படும் ஞானமாம், இங்கு இதனை

நீங்குபடி—இவ்விடத்து இவ்விபரீதஞானத்தை நீங்கும்வண்ணம், மாணவக நின்போதம் ஒன்று இரண்டும் தாங்குபடி துணிந்திலி—மாணவகனே? நான் எனது என்னும் உனது ஆன்மபோதமிரண்டும் முனைப்பறத் திருவருட்செயலாய்த் தெளிந்து நிற்குதி.

இதுவே பரபோகானுபவத்தைக் கொடுக்கும் கிட்டைக்கு நெறி.

17\. கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலவறி விச்சைதொழில் தான்பூத்தல்—மூலமாம்
மாயை மயக்கல் வரைதல் வினைகூட்ட
லாயவிட லாமென் றறி.

இ—ள்: கலை ஆதி தத்துவங்கள்—கலை வித்தை அராகம் என்னும் மூன்று தத்துவங்களும், சால அறிவு இச்சை தொழில் பூத்தல்—பெரிதும் அறிவு இச்சை தொழில் என்னும் மூன்றனையும் பயப்பன, மூலமாம் மாயை மயக்கல்—இவை தோன்றற்கிடமாகிய மாயை மயக்கத்தைச் செய்யும், காலம் நியதி வரைதல் வினை கூட்டல் — காலதத்துவம் பிராரத்தவினையின் கால எல்லையை வரம்புசெய்தல் நியதிதத்துவம் ஆன்மாக்கட்குரிய வினைப்பயன் களை மாறாது கூட்டுதல், ஆய—ஆகிய இவ்வியல்புகளையுடையன, விடலாம் என்று அறி—ஆதலின் இவையும் இறைவனுணை வழிநின்று தொழிற்பட்டு உடலோடழியுமெனத் தெளிந்து துறத்தல் சாலும். ஆதலின் கலாதியானுய ஞானம் விபரீத ஞானமெனத் துறக்கப்படுவனவென்றறிகுதி.

தான், அசை.

## சுத்ததத்துவதூடணம்.

சுத்த தத்துவங்கள் பதமுத்தியைப்பயந்து பாமுத்தியைப்பயக்கும் கிட்டைக்குத் தடையாயிருந்தவிடத்து அவற்றையுந் துறத்தல்வேண்டுமெனக் கூறுதலின் இப்பெயர்த்து.

18\. ஆனவத லலமுந்தி ஞலாச தற்கேன்
ஈன வயிந்தவத்தி னெல்லைகாண்—ஊனமிலாப்
போகந் தருமானுற் பொல்லாதோ புண்ணியத்தி
ளுகந் துணையானர்க் காம்.

இ—ள்: புண்ணியத்தின் ஆகம் துணை ஆனூர்க்கு—பல்கோடி பிறவி களிற் செய்த புண்ணியத்தின் பயனுகச் சுத்த மாயாதேகத்தைத் துணையாகக் கொண்டவதரித்த பெரியோருக்கு, ஆன அதனுல் அழுந்திலுல் அதற்கு ஆச ஏன்—அச் சுத்தமாயாதேகத்தோடு கிட்டை புரிவாராயின் அச்சுத்ததத்துவங்கட்குத் தூடணஞ் செய்யப்படுதற்கமைந்த குற்றம் எக்காரணத்தாற்



பொருந்தும், ஈனவயிந்தவத்தின் எல்லை— தூடணஞ்செய்யுமாறு இழிவடைந்த சுத்ததத்துவங்கள், ஊனம் இலாப் போகந் தரும் ஆனல் பொல்லாதோ?—சுத்த மாயாதேகத்தோடு உடனுய் நின்று கிட்டைபுரிதற்கு உபகாரமாய்க் குற்றமில்லாத பரபோகத்தைப் பயப்பனவாயின் அவை பொல்லாப்புடையனவோ?, காண்—அதனைத்தேருதி.

பதமுத்தியைப்பயந்து பாமுத்திக்குத் தடையாயவழியே அவை தூடணஞ்செய்யப்படுவன. அல்லுழி அவை தூடணஞ் செய்யப்படுவனவல்ல என்பதாம். அதனுல்' என்றவிடத்து மூன்றனுருபு "தாங்குகையா னேங்குநடைய" என்றவிடத்துப்போல உடனிகழ்ச்சிப் பொருளின்கண் வந்தது. உண்மைச் சரியை கிரியை யோகங்களைப் பயிலுகின்ற ஞானிகளுடைய தேகம் சுத்தமாயா தேகம் என்பதை:-

"மேதகு சிவமே சத்தியே நாதம் விந்துவே சதாசிவ மகேச
பேதமே யரனென் றிவர்க்கும்விஞ் ஞான கலரொடு பிரளயா கலர்க்கும்
தீதறு சரியை கிரியையோ கத்திற் சேர்ந்தவர் தமக்குநற் றனுக்கள்
ஓதறு கரண புவனபோ கமுமைங் கலையுமற் றுயிர்ப்பது சுத்தம்."

என்பதனுனுமுணர்க. ஆம் அசை.

19\. சுத்தவித்தை யாதிமுதற் சொன்னவேழ் தத்துவமு
மொத்து நடத்திடு மோவாமல்—வித்தைசெய
லேறிக் குறைந்தொத்த லெப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு.

இ—ள்: வித்தை செயல் ஏறி குறைந்து ஒத்தல்— சுத்தவித்தையில் ஞானம் ஏறிக் கிரியைகுறைந்தும், ஈசுரதத்துவத்தில் கிரியையேறி ஞானங் குறைந்தும், சாதாக்கியத்தில் இரண்டும் ஒத்தும், மாறிப் பிறந்து அகலுமாறு—சத்திதத்துவத்தில் தனித்துக் கிரியையேயாயும், சிவதத்துவத்தில் ஞானமேயாயும், இங்ஙனம் மாறிப்பிறந்தவெவ்வேறியல்பினவாதலை, பார்த்திட—உற்று நோக்குமிடத்து, சுத்தவித்தை ஆதி முதற் சொன்ன ஏழ் தத்துவமும்—சுத்தவித்தைமுதலாக நாதம் விந்து விரண்டுஞ்சேர்ந்து சுத்ததத்துவங்கள் எனச் சொல்லப்பட்டவை ஏழும் ஒத்து, ஓவாமல் நடத்திடும்—என்றுமொழியாது கலையாதி தத்துவங்களை நடத்துவன.

ஒருதன்மையனவன்றிப் பலதன்மையனவாய் ஒன்றற்கொன்று வேருய் ஒத்துத் தொழிற்பட்டுப் பதமுத்தியைப் பயந்து பாமுத்திக்குத் தடையாய் நிற்றலின் அவை தூடணஞ் செய்யப்படுவன என்பதாம். ஆதலின் இவற்றைப்புறந்துறத்தி. ஏ அசை.

## தத்துவாதீதம்.

தத்துவங்களினின்று நீங்கிய நிலையையுணர்த்துதலின் இப்பெயர்த்து.

20. மண்முதலா நாதாந்த மாய்வந்த தத்துவத்தி
னுண்மையறிந் தெல்லா மொழிந்தாயே—எண்ணிலிவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமறை
யத்துவா வெல்லா மற.

இ—ள்: மண்முதலாய் நாதாந்தமாய் வந்த—நிலம்முதலாக நாதமீறாதி யாகவந்த, தத்துவத்தின் உண்மை அறிந்து — தத்துவங்கள் சடமெனவு மழிந்துபோவனவென்று மவற்றினுண்மைத் தன்மையை யுணர்ந்து, எல்லாம் ஒழிந்தாய்—அவற்றின் பந்தத்தினின்று நீங்கினாய், இவை எண்ணில்—இவ் வியல்புகளை ஆராயின், அத்துவா எல்லாம் அற—மந்திரம் முதலிய ஆகாமிய வினையை ஈட்டற்கு வழியாகிய ஆறத்துவாக்களு நீங்க அதனைத், தத்துவா தீதம் என சைவமறை சாற்றும்— தத்துவாதீதம் என்று சைவாகமங்கள் கூறும், காண்— அதனை யறிகுதி.

அத்துவா—வழி. ஏ-அசை. மந்திரம், பதம், வர்னம், புவனம், தத்து வம் கலை ஆறும் அத்துவா.

21. இப்பரிசே யைந்துசத்தி யெய்தியதா லெப்போதுஞ்
செப்பரிய மாயாதி தீருமே—யப்பரிசே
யாங்கவற்றி னோடே யழியும் வினைமலந்தான்
நீங்கவற்றோ நீங்கா நிலை.

இ—ள்: இப்பரிசு ஐந்து சத்தி எய்தியதால் — இத்தன்மையாகப் பூதப் பழிப்பு முதலைந்து சத்திகளுமடைந்த காரணத்தால், செப்பு அரிய மாயாதி எப்போதும் தீரும்— இத்தன்மைத்தென்று சொல்லுதற்கரிய மா யையுமதன்காரியங்களும் ஒருபோதுமில்லாதழிந்து போவன, அப்பரிசு ஆங்கு அவற்றினோடு வினை மலம் அழியும்—மாயையுமதன்காரியங்களுமொ ருசேரவழிந்ததன்மைபோல அவற்றோடு அப்பொழுதே மாயையைப்பற்றி நிற்கின்ற வினையும் அதற்குக்காரணமாகிய மலமுமழிந்துபோவன, நீங்கா நிலை நீங்கவற்றோ— என்றுநீங்காது அணுவியேபற்றிநின்ற மலகன்ம முத லியவற்றின் பந்தத்தானுயநிலை எளிதினீங்குமியல்பினதோ? இன்று அரிதி னீங்கற்பாலது என்பதாம்.

மாணவகனே இதனைத்தேருதி. ஏகாரம் மூன்றும், தான் என்பதும் அசைகள். ஓகாரம்-எதிர்மறை.



## சகல தரிசனம்.

தத்துவங்களினின்று நீங்கி அவற்றைத் தன்னின் வேறாகக் காண்ட லின் இப்பெயர்த்து.

22. நின்றுநின்று வந்த நிலைதோறு நீயறிந்த
தன்றி யவைதன்னை யகன்றாயே—இன்றிவைதான்
முத்தி படுஞ்சகல முன்னம் படுசகலம்
பெத்தமது வென்றுநீ பேசு.

இ—ள்: நின்று நின்று வந்த நிலைதோறும்—மாணவகனே நீ நின்று நின்று நீங்கி வந்த அவதரங்கள்தோறும், நீ அறிந்தது அன்றி-அத்தத்துவங் களைச்சடமென நீ அறிந்தவளவில் நில்லாது, அவை தன்னை அகன்றாயே— அவற்றினின்று நீங்கிச் சுத்திபெற்றாய், இன்று இவை முத்திபடும் சகலம்— இந்நிலையில் இத்தத்துவங்களை நின்னின்வேறாகக் காண்டல் முத்தியிற்சகல மாகும், முன்னம்படு சகலம்— தத்துவங்களோடு ஒன்றாய்நின்றுபட்ட சகல மோவெனில், அது பெத்தமென்று நீ பேசு— அது பெத்தத்திற் சகல மென்று நீ கூறிக்கொள். இதுவே இரண்டனுக்குமுள்ள வேற்றுமை அதனை அறிகுதி.

23. அஞ்சு வகையாக வாறுறு நீத்ததற்பின்
விஞ்சிவரு மாணவத்தின் மேலீடு—வஞ்சமறச்
சாற்றிலது கேவலமாந் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றிலது சகலந் தான்.

இ—ள்: அஞ்சுவகையாக ஆறுறு நீத்ததற்பின்— ஐந்து அவதரங்க ளாகமுப்பத்தாறு தத்துவங்களையுஞ்சுத்திசெய்தபின், விஞ்சிவரும் ஆணவத் தின் மேலீடு—அச்சுத்தியில்நீங்காது அதிகரித்துவருமாணவமலத்தின் பெ ருக்கத்தை, வஞ்சம் அறச் சாற்றில் அது கேவலமாம்—உன்னை வஞ்சியாது கூறின் அது கேவலமாகும், கழித்துப் போந்தநிலை சாற்றில்— இக்கேவலத் தைக்கழித்து அடைந்தநிலையைக்கூறின், அது சகலம்—அது சகலம் எனப் படும். தான், இரண்டும் அசைகள்.

## கேவலம்.

ஆணவமலம் ஆன்மாவினறிவை மறைத்து நிற்குநிலையாதலின் இப்பெ யர்த்து.

24. அன்றிவந்த தத்துவங்க ளெல்லா மகன்றிடவே
ஒன்றிநின்ற வாணவந்தா னென்றுமே—என்றுந்தான்
நீங்கா திருள்விழிபோல் நிற்குமே யான்மாவும்
பாங்காக வாங்கே பதிந்து.

இ—ள்: அன்றி வந்த தத்துவங்கள் எல்லாம் அகன்றிட— எனக்கு விபரீதஞானத்தை உண்டாக்கி என்னறிவை உண்மையுணரவொட்டாது மயக்கித்தொடர்ந்துவந்த தத்துவங்களெல்லா மொருசோ நீங்கிச் சத்தியாகியவிடத்தும், ஒன்றி நின்ற ஆணவம் ஒன்றுமே — என்னைவிட்டுப்பிரியாது கலந்துநின்றவாணவமொன்றுமே, என்றும் விழி நீங்காஇருள்போல— என்றுங்கண்ணொளியை மறைத்துநின்று அந்நிலையில்நீங்காத இருள்போல, ஆன்மாவும் பாங்காக ஆங்கே பதிந்து நிற்குமே— ஆன்மாவும்நன்றாக அதில் மறைந்து செயலறுமாறு நிற்கின்றதே! இது என்ன வியப்பு.

எகாரம் முன்னையது அசை; நடுவணது பிரிநிலை; ஈற்றது தேற்றம். தான்-அசை. உம்மை-இழிவு.

25. பகலிழந்த வான்போற் பரவு மலநீயா
இகலறவே நின்று யிழந்தா—யகலறிவு
வாடாத முத்தியினில் வாய்த்தவருட் கேவலநீ
நாடாத கேவலமுன் நாள்.

இ—ள்: பகல் இழந்த வான் போல்—சூரியனில்லாத வான்போல, பரவும் மலம் நீயா—உன்னறிவை வியாபித்து மறைத்த ஆணவமலமே நீயாகி, இகல் அறவே நின்றாய்—உன் வலியழிந்தொழிய நீ செயலற்று நிற்கின்றாய், அகல் அறிவு இழந்தாய்— இந்நிலையில் உன் அகன்றஅறிவை இழந்தாய், வாடாதமுத்தியினில் வாய்த்தஅருட்கேவலம்— இது வாட்டமில்லாத முத்தியினிடத்து நிகழும் அருட்கேவலமென அறிகுதி, நீ முன்னாள் நாடாத கேவலம்— இது நீ இந்நிலையையடைவதன்முன் ஒருபோதும் அநுபவித்தறியாத கேவலமாகும், மாணவகனே இதனையறிகுதி.

துன்பஞ்சிறிதுமில்லாததென்பார் வாடாதமுத்தியென்றார்.

## கேவல தரிசனம்.

கேவலநிலையைக்காண்டலின் இப்பெயர்த்து.

26. ஒன்றுந் தெரியா வொழியா விருளாகி
யின்றளவு நின்ற திதுவோதான்—ஒன்றாகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற வாணவந்தா
னம்பு நிழற்போலென் றறி.

இ—ள்: ஒன்றுந்தெரியா ஒழியா இருளாகி— இருளையன்றிப் பொருள் ஒன்றுந்தெரியவியலாத நீங்காவிருளாகி, இன்றளவும் நின்றது இதுவோ—இன்றுவரையும் மறைத்து நின்றது இவ்வாணவமோ? செம்பிற் களிம்புபோல் ஒன்றாகி சேர்ந்து நின்ற ஆணவம்— செம்பிற்களிம்புகலந்து



நிற்குந்தன்மைபோல ஒன்றாகி ஆன்ம அறிவைக்கலந்துநின்றஆணவம், அம்பு நிழல்போல் என்று அறி — நீரின் நிழல்போலக் காட்சிப்புலனாகாததொன்றென அறிகுதி மாணவகனே? என்றபடி.

தான் இரண்டும் அசை.

27. கருவி கரணங் கழன்றுங் கழலா
விருளின் பெருமையிது வென்னோ—விருள்தான்
விடிகைக்கிருண்ட மிகுதிபோன் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று.

இ—ள்: கருவி கரணம் கழன்றும்—தத்துவங்களெல்லாம் என்னை விட்டு நீங்கியவிடத்தும், கழலா இருளின் பெருமை இது என்னோ— என்னை விட்டு நீங்காத ஆணவ இருளின் பெருமிதம் இது என்னையோ? என்குருநாதனே அதனை அருள்வீராக, விடிகைக்கு இருண்ட மிகுதிபோல்—விடிதற்குச் சிறிதுமுன்னாகப் பூதவிருள்செறிந்து திரண்டெழுந்ததுபோல, இருள் மாசு மடிகைக்கு இருண்டது— இவ்விருள் இறுகாறும் உன்னை மறைத்துநின்ற மலவிருள் ஒருசோவழிந்தொழிதற்கு மிகுத்துக் காட்டுகின்றது, காண்—மாணவகனே இதனையறிகுதி.

தான் மற்று இரண்டும் அசை.

## கேவலாதீதம்.

கேவலத்தினின்று நீங்குதல் கூறுதலினிப்பெயர்த்து.

28. வானி லிரவிவர வல்லிருள்போ மாறுபோ
லீன விருளகல்வ தெக்காலம்—மானே
அறிந்தா யிருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ வில்லையோ பேசு.

இ—ள் வானில் இரவிவர—ஆகாயத்தில் சூரியனுதிக்க, வல் இருள் போமாறுபோல— எல்லாப் பொருளையும் மறைக்குமாற்றலமைந்த விருள் வலியழிந்து தன்செயலற்று நீங்குந் தன்மைபோல, ஈன இருள் எக்காலம் அகல்வது—என்னறிவை முழுதும் மறைத்துநிற்கும் இம் மலவிருள் எப்பொழுதுதான் என்னைவிட்டுநீங்கும், என்குருநாதனே இதனையருள்வீராக, மானே இருள் என்று அறிந்தாய்—இச் சிறந்த பக்குவத்தையடைந்த என்னருமை மகனே இதனை மலவிருளென்று உன்னின் வேறாகக்கண்டாய், அறியாமை தன்னை பிறிந்தாயோ இல்லையோ பேசு— இங்ஙனம் வேறாகக் கண்ட நீ அவ்வறியாமையாகிய விருளினின்று நீங்கினாயோ நீங்கவில்லையோவென்பதை ஆராய்ந்து சொல்லுதி.

பிரிந்தாய் என்பது எதுகைநோக்கிப் பிறிந்தாய்எனநின்றது. தன்—அசை.

29. இந்த விருளொழிய வேதும்நான் காண்கிலே
னிந்த விருளகல்வ தெப்படியோ—விந்த
வறியாமை நின்றா லதனைநீ காணா
யறியா தறிந்தனையோ வன்று.

இ—ள்: இந்த இருள் ஒழிய நான் ஏதும் காண்கிலேன்—இந்தவிருளை யன்றிப் பிறிதொன்றனையும் நான்காண்கிலேன், இந்த இருள் எப்படியோ அகல்வது—இத்தன்மைத்தாக எல்லாப் பொருளையும் மறைத்துத் தன்னை யே காட்டிநிற்கும் இவ்விருள் எப்படிநீங்கும், என் குருவே இதனை அருளு வீராக, இந்த அறியாமை நின்றால் அதனை நீ காணாய்— இந்த அறியாமை யாகிய இருள் உன் அறிவை மறைப்பதானால் அதனையும் நீ வேறாகக் காண மாட்டாய், அறியாது அறிந்தனையோ—அதனை இருளென வேறாகக்காணாது கண்டறிந்தாயோ? மாணவகனே நீ கூறுதி; அன்று— வேறாகக்கண்டே அறிந்தாய், நீஅதனை இருளென வேறாகக்கண்டாய் ஆதலின் அதனைப் பிரிந்தாய் என்பது குறிப்பு.

## தன்னுண்மை.

தன்னை, மும்மலங்களினின்று நீங்கி வேறாகத் தனித்துக்காண்டலின் இப்பெயர்த்து.

30. அந்த மலமா மறியாமை கண்டாயே
அந்த வறிவுநீ யையனே—தொந்தவிருள்
போனதே யுன்னைவிட்டுப் போக்கித் திரோதையரு
ளானதே கண்டா யறி.

இ—ள்: அந்த மலம் ஆம் அறியாமை கண்டாய்—அந்த ஆணவமல மாகிய மறைத்தலைச்செய்யும் பொருளைக்கண்டாய், அந்த அறிவு ஐயனே நீ— அங்ஙனங்கண்ட அறிவே என்மகனே நீ என்று அறிகுதி, தொந்த இருள் உன்னை விட்டுப் போனது—இதுகாறுமுன்னைவிட்டுப்பிரியாது தொடர்ந்து பந்தித்து நின்றவிருள் இப்பொழுது உன்னைவிட்டு முழுதும் நீங்கியது, உன்னை விட்டுப் போக்கி திரோதை அருள் ஆனது — இத்துணையுமம்மல விருள் தொழிற்படுமாறு இயக்கிநின்ற இறைவனது திரோதானசத்தி அம் மலவிருளைத்தொலைத்து இப்பொழுது அருட்சத்தியாயிற்று, கண்டாய்— அதனை நீ அனுபவத்திற்கண்டாய், அறி—அதனை நன்று தெளிந்து கடைப் பிடி.

ஏகாரங்கள் முன் பின் இரண்டுந் தேற்றம். நடுவணது வினா. விட்டு என்பதனை இரண்டிடத்துங் கூட்டி உரைக்கப்பட்டது. உண்மைஞான மெய்தும் பரிபாகமடைந்த ஞானக்குழந்தையாகலின் ஐயனேயென விளித் தருளினர்.



31. வைத்த வவதாரங்க ளெல்லா முடன்வந்
மத்த கமைகண்டு மறியாயால்—முத்தனாய்ப்
பாச வறிவும் பதியறிவு மன்றியே
யாசறவே நின்றவன் நீயாம்.

இ—ள்: வைத்த அவதாரங்கள் எல்லாம் உடன் வந்தும்—முறையான மைக்கப்பட்டுள்ள அவதாரங்களெல்லாவற்றோடு முடனாய்நின்று அவற்றின் நின்று நீங்கிவந்தும், அத்தகைமை கண்டும் அறியாய்— அவற்றைச் சடமென நன்று தெளிந்தும் இன்னும் நீ இதனை அநுபவத்திற் கண்டாயல்லை, முத்த னாய்—முத்தியடையும் பரிபாகமடைந்தவனாய், பாச அறிவும் பதி அறிவும் அன்றி—பாசஞான பசுஞானங்களன்றி, ஆசறவே நின்றவன் நீ—மலமாயை கன்மங்களாகுயகுற்றம் முழுதுநீங்கி நின்றவன் நீ என்பதனைத்தெளிந்து கடைப்பிடி.

உம்மைகள் இரண்டும் எண். ஏகாரங்கள் தேற்றம். ஆம் அசை.

## சைதன்னிய தரிசனம்.

ஆன்மா மலத்தினீங்கிய சுத்தநிலையிற்றன்னைக்காண்டலின் இப்பெயர்த்து.

32. கண்ணிலிருள் போனாலுங் கண்டன்னைக் காணாபோ
லெண்ணுமிருள் போனா லெனையறிய—வொண்ணாதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
வொண்போத நீயென் றுணர்.

இ—ள்: கண்ணில் இருள் போனாலுங் கண் தன்னைக் காணா போல்— கண்ணொளியை மறைத்துநின்ற விருள் நீங்கியவிடத்துங் கண் தன்னைத் தான் காணாத தன்மைபோல, எண்ணும் இருள் போனால்—எண்ணப்படும் மலவிருள் நீங்கியவழி, எனை அறிய ஒண்ணாதோ—என்னை யான்அறிய முடி யாதோ? என்குருவே யதனையருளுவீராக, கண்போல் நீ சடமோ?—கண் போல நீயுஞ் சடப்பொருளோ? காட்டியதும் கண்டு அறிந்த — காட்டிய வளவிலதனைச் சந்தேகவிபரீதமின்றிக் கண்டு தெளிந்த, ஒண் போதம் நீ என்று உணர்— ஒளியையுடைஞானம் நீ என்பதனை நன்றுணருதி.

உள்ளதை உள்ளபடி உண்மைநிலையிற்காணும் போதம் என்பார் ஒண் போதம் என்றார்.

33. இருட்கு மொளிக்கு மிடமாகும் வான்போ
லருட்கு மருட்கு மகமாய்ச்—சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
னாய்சத் ததுவசத்த தாம்.

இ—ள்: இருட்கும் ஒளிக்கும் இடமாகும் வான்போல்— இருளும் ஒளியும் இருத்தற்கு இடமாகும் ஆகாயம்போல, அருட்கும் மருட்கும் அக

மாய்-அருளுக்கும் அஞ்ஞானத்தைப் பயக்கும் மலத்திற்குமிடமாய், சுருக்கம் இல்லா நீ — விரிந்த அறிவையுடைய நீ, சத்து அசத்து அன்று — சத்து மல்ல அசத்துமல்ல, நேரே சதசத்தன்— சத்தோடுசேர்ந்தவழி சத்தாயும் அசத்தோடுசேர்ந்தவிடத்து அசத்தாயும் இத்தன்மையிற் சமமாய் நிற்குமியல்புடைய சதசத்தாவை, ஆய் — இதனைச்சிந்தித்துத் தெளிகுதி, சத்து அது— அங்ஙனமின்றிப் பதிப்பொருளென்றுஞ் சத்தாயுள்ளது, அது அசத்து — சடமாகிய பாசப்பொருள் என்று மசத்தாயுள்ளது.

உம்மைகள் எண். ஆம் அசை.

34. அறியு மறிவுநீ யன்றோ வுனக்குச்
செறியுமல நின்றதோ செப்பா—யறிவுதனைப்
பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கத்தில்
வாராத தன்றோ வழக்கு.

இ—ள்: அறியும் அறிவு நீ அன்றோ—இது சத்து இது அசத்து என அறியும் தெளிந்தஞானம் ஆன்மாவாகியநீயல்லவா, உனக்குச் செறியும் மலம் நின்றதோ செப்பாய்—இந்நிலையையடைந்த உனக்கு அனாதியே பந்தித்து நின்ற மலம் இப்பொழுது நிற்கின்றதா அதனைக்கூறுதி, அறிவு பாராதே பார்த்தறிந்து—பழக்கவாசனையால் உன்னையறியாதே பண்டுபோலச் சத்தென உன் அறிவு கண்டறிந்து, பாச பழக்கத்தில் வாராதது அன்றோ வழக்கு—பண்டு பயின்ற அப்பழக்கத்தில் மீட்டும் வந்து பெத்த நிலையையடையாதிருப்பதல்லவா பெரியோர் வழக்கு முன் கடனுமாகும்.

தன் ஐ அசை.

பழக்கவாசனையான் மயங்கி தம்மையறியாதே மீட்டும் பெத்தநிலையை யடையாது வாசனாமலத்தையுமறவேயொழித்து நிற்பதே முத்திநிலையை யெய்தும் பெரியோரது நிலையாய பழக்கம். ஆதலினீயுமந்நிலையிற்றவறாது நிற்குதி என்பதாம்.

"பழக்கந்தவிரப்பழகுவதன்றி - உழப்புவதென்பேனேயுந்திபற" என்பது நோக்குக.

## ஞான தரிசனம்.

மெய்ஞ்ஞானமாகிய திருவருளையறிதலின் இப்பெயர்த்து.

35. அறிந்தறிந்து வந்த வவதாரங்கள் தோறுஞ்
செறிந்தறிய நின்றதெது தேரின்—பிறிந்ததனின்
நின்ற தறியாமல் நிகழ்த்தியது நீக்கியுனை
யின்றறிய வைத்ததரு ளென்.



இ—ள்: அறிந்து அறிந்து வந்த அவதாரங்கள் தோறும்— தத்துவங்களினியல்பைச் சடமென உண்மையினுணர்ந்து அவற்றோடு தொடர்பின்றி நீங்கிவந்த அவதாரங்கள்தோறும், அறிய செறிந்து நின்றது எது—உண்மையை நீ அறிதற்கு உற்ற துணையாய் உன்னோடு உடனாய்நின்று உணர்த்தியதெது, தேரின்—ஆராயின், அதனிற் பிறிந்து— அத் தத்துவங்களினின்று நீ பிரிந்து, நின்றது அறியாமல் நிகழ்த்தி—உன்னோடுதான் உடனாய் நின்றதை நீ அறியாமல் நின்று உண்மைஞானத்தை உணர்த்தி, உனை அது நீக்கி-அந்நிலையினின்றும் உன்னை நீக்கித் தத்துவசுத்தியையாக்கி, இன்று அறிய வைத்தது அருள் என்—இன்று இவ்வுண்மையையுணர்ந்து தன்னையுமறியுமாறு உன்னை இந்நிலையிற் கொடுவந்து வைத்தது இறைவனது கருணையாகிய திருவருளென அறிவாய்.

உனை என்பதை இரண்டிடத்துங் கூட்டுக.

36. அந்த வருளுனக்கிங் காதார மாயல்லி
னிந்து வெனவெறித்திட் டேகமாய்—முந்தி
யுனையுனக்குத் தான்விளக்கி யோவா துணர்த்துந்
தனையுனக்குக் காட்டுமே தான்.

இ—ள்: அந்த அருள் உனக்கு இங்கு ஆதாரமாய்— அந்தத் திருவருளே உனக்கு இவ்விடத்துத் தஞ்சமாய், அல்லில் இந்து என எறித்திட்டு—இருள்செறிந்த இராக்காலத்துதித்தெழுந்த சந்திரனைப்போன்று தன் அருள் ஒளியைப் பரப்பி உன் அஞ்ஞானஇருளைத் துரந்து, முந்தி ஏகமாய் உனை உனக்கு விளக்கி-முதலில் தத்துவங்களோடுசார்ந்துநின்ற உன்னை அவற்றில் நின்றும் பிரித்து நீக்கிச் சுத்திசெய்துகாட்டி, ஓவாது உணர்த்தும் தனை உனக்குக் காட்டும்—பின்னர் உன்னை என்றும் பிரியாது உடனாய்நின்று உண்மைஞானத்தை உணர்த்துந் தன்னையுந் தரிசிக்குமாறு காட்டியருளும் இதனை நன்கு தெளிந்து கடைப்பிடி. ஏ தான் அசை.

37. எல்லாம்பொய் யென்றிங் கிருந்தேனு நானன்றோ
நல்லா யெனையறிந்தே னானன்றோ—சொல்லாடு
நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று.

இ—ள்: எல்லாம் பொய் என்று இங்கு இருந்தேனும் நான் அன்றோ—தத்துவங்களெல்லாம் பொய்யென்று அவற்றைத்துறந்து இந்நிலையில் இருக்கின்றவனு நானல்லவோ, நல்லாய் எனை அறிந்தேன் நானன்றோ—பிறரொருவர்காட்டாது என்னைச்சித்தென்று நன்கறிந்தவன்நானல்லவோ, சொல்லாடும் நான் பிரமம் அன்றி—இங்ஙனமறிந்துசொல்லும் நானே பிரமமாவேன்

அதுவன்றி, உணர்த்துதற்கு நடுவே வான் பிரமம் உள்ளதோ — அவ்வியல்பை யெனக்குணர்த்துதற்கு எனக்குத் தத்துவங்கட்குமிடையே என்னிலும் முயர்ந்த ஓர் பிரமம் உளதோ? இன்று என்பதாம்.

எல்லாம் பொய்யென்று கண்டவனும் நன்றாய் என்னை அறிந்தேனும் நானேயாவேன் ஆதலி நானேபிரமமாவேன் என்னைவிட வேறு பிரமமில்லை என்றபடி.

உம்மை, எண். மற்று அசை.

38. அன்றுமுத லின்றளவு மண்ணலறி விப்பதன்றி
யின்றறிவேன் நானென் றியம்புவதே—னென்று
மவத்தை தனினுணர்த்தி யாங்கருத்தி யின்றித்
தவத்தி னுணர்த்தினரார் தான்.

இ—ள்: அன்றுமுதல் இன்றளவும் அண்ணல் அறிவிப்பதன்றி — அன்றுதொடங்கி யின்றுவரையுமான்மாவாயகாகிய பிரானுமே உன்னோடுடனாய் நின்று உன் அறிவைவிளக்கி உண்மையையுணர்த்துவதன்றி, இன்று நான் அறிவேன் என்று இயம்புவது என்—இன்று நானறிவேனென்று நீசொல்வதெப்படி, அவத்தை தனில் என்றும் உணர்த்தி— கேவலம் சகலமிரண்டினுமுன்னைப்பிரியாது நின்றுணர்த்தி, ஆங்கு அருத்தி இன்றி— அவ்வவத்தைகளிலுள்ள துபோகங்களனுபவித்தற்றொலைக்கவிடத்து, தவத்தில் உணர்த்தினர் ஆர்— இச்சுத்தாவத்தையில் உனக்கு உண்மைஞானத்தையுணர்த்தினவர் யாவர்? மாணவகனே அதனை நீ யோர்ந்து கூறுதி. தான் அசை.

39. உன்னறிவை நீயே யுணர்வையே யாமாகி
லின்னெடுநாட் பாசத் தியையாயே—உன்னறிவை
நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ
லாங்கா ணரனு ரருள்.

இ—ள்: உன் அறிவை நீயே உணர்வையே ஆகில் — உன் அறிவை நீயே வேறு துணையின்றி அறிவாயாயின், இன் நெடுநாள் பாசத்து இயை யாய்-இப்பல்லூழிகாலமாக மலத்தொடக்கிற்பட்டுப் பிறந்திறந்து துன்புறுய்; நீரும் இரதமும்போல் உன் அறிவை நீங்கா அறிவாகி — நீரும் அதன்குணமாகிய சுவையும்போல உன்னறிவை என்று நீங்காவறிவாகி, அரனார் அருள் ஆம் காண் — ஆன்மாக்களை மலபந்தத்தினின்று நீக்கித்திருவடியிற் சேர்க்கும் இறைவனது அருளே உன்னை இக்கிலையிற் கொடுவந்தது மாணவகனே அதனை அறிகுதி. ஏகாரம் இரண்டும் அசை.



40. உன்னறிவுக் குள்ளே யுணர்வா யொழியாத
தன்னறிவு தானுனக்குத் தாரகமாய்ப்—பின்னமற
வொன்று யொழியாம லுள்ளடங்கி யுள்ளபடி
நின்று லதுவாவை நீ.

இ—ள்: உன் அறிவுக்கு உள் உணர்வாய் — உன் சிற்றறிவினுள் அறிவுக்கறிவாகி யென்றும் பிரியாதுநின்று உன்னறிவை விளக்கும், ஒழியாத தன் அறிவு தான் உனக்குத் தாரகமாய்—அச்செயலில் நின்று மென்றுநீங்காத இறைவனது பேரறிவாகிய திருவருளேயுனக்கு ஆதாரமாக, பின்னமற ஒன்றாய்—பேதமின்றிக் கலந்தொன்றாகி, ஒழியாமல் உள்ளடங்கி உள்ளபடி நின்றால் — கேவலத்தையடைந்து உன்னுணர்வுநீங்காமல் உன்செயலற்று அருட்செயலில் நிற்பையாயின், நீ அது ஆவை — நீ அத்திருவருளேயாவாய்.

ஒன்றாய்ப் பின்னமற உள்ளடங்கியுள்ளபடி ஒழியாது நிற்றல் அறிதென்பதையுணர்த்துவார், பின்னமற வொன்றாயொழியாமலுள்ளடங்கி யுள்ளபடி நின்றாலெனவும், என்றுமான்மாத்திருவருளில் நீங்காதுவியாப்பியமாய் நிற்குமியல்பேயதனியல்பென்பதை யுணர்த்துவார் உள்ளபடி எனவுங் கூறினார். அதுவாதல்- தன்செயலற்று அருட்செயலாய் நிற்றல். ஏ- அசை.

41. இச்சை யுயிர்க்கிரங்கல் ஞான மிசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயரடத்தல்—நிச்சயமாஞ்
சத்தியிவை மூன்றினையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று.

இ—ள்: இச்சை உயிர்க்கு இரங்கல்—இச்சாசத்தியாவது அனாதியே மலத்தொடக்குற்ற வான்மாக்களிடத்துக்கொண்ட கருணை, ஞானம் இசைந்து உணர்த்தல்—ஞானசத்தியாவது ஆன்மாவையென்றும்பிரியாது அறிவுக்கறிவாய் நின்று ஆன்மஅறிவை விளக்குதல், வைத்த கிரியை வயரடத்தல்—ஆன்மாக்கள் தத்தம் வினைப்போகத்தை நுகருமாறு அவற்றைத் தொழிற்படுத்துஞ் சத்தி கிரியாசத்தியாகும், நிச்சயம் — இதுவே ஆன்மாக்களினிடத்து உண்மையல்நிகழும் நிகழ்ச்சி, இவை மூன்று சத்தியினையும்—இம்மூன்று சத்திகளையும், தந்தது ஒரு சத்தி காண் — கொடுத்தருளிய ஒரு சத்தி உனது அதனை மாணவகனே நீ அறிகுதி, முத்தனே நீ முயன்று பார்—வீட்டையும் பரிபக்குவமடைந்த என் மகனே? நீயதனை இடைவிடாது ஆராய்ந்து தெளிந்து அநுபவத்திற் காண்குதி.

வைத்தனென்பது எதுகைநோக்கி வைச்ச என்றுயிற்று "விண்ணுமண்ணகம் முழுதும் யாவையும், வைச்சவாங்குவாய்" என்பது நோக்குக. மாணவகன்மீதுகொண்ட பக்குவநோக்கிய அன்பினால் முத்தனே எனவிளித்தார். "ரண்டலருமையுணர்த்துவார் பார். நீ முயன்று எனவுங்கூறினார். ஆம் அசை.

பரைதரிசனத்திற்குத் தோற்றுவாய்கூறியபடி. பூதப்பழிப்புமுதல் ஞானதரிசனமிறுவாயாகச் சொல்லப்பட்ட அவதாரம் பதின்மூன்றஞ்சுத்தாவத்தையிற் சாக்கிரமாம். இதனுள் தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆன்மரூபம் என்னும் நான்கு காரியங்களுமடங்கும்.

இச்சுத்தசாக்கிரத்தையடைந்தவான்மா மலவாசனையாகிய மயக்கத்தால் சிவபோதமுனைத்து நான்பிரமமென நிற்கும். இக்காரணத்தால் இச்சாக்கிரம் "போதநிலை" யென்றுமழைக்கப்படும்.

பரசமயங்களாகிய தீதகற்றத் திருவவதாரஞ்செய்தருளிய திருஞானசம்பந்த சுவாமிகள் இப்போதநிலையாகிய சுத்தசாக்கிரத்து அதீதத்தைப் புரிந்துநின்றே சமணபௌத்த மதங்களை நிராகரித்து வைதிக சைவத்தை நிறுவியருளினர். இக்காரணம்பற்றியே "போதநிலை முடிந்தவழி" எனச் சேக்கிழார் சுவாமிகளுங் கூறியருளினர். இப்போதநிலை என்பதற்குச் சிவபோதம் அல்லது புருடனும் நின்று போகநுகருநிலை எனப்பொருள்கோடல் அருட்டுணையின்றி மருட்டுணைகொண்ட கூற்றெனக்கொள்வதே யன்றி வேறின்று. மூவாட்டைப்பருவத்திற்றானே உலகமாதாவாகிய எம் அன்னையாராகும் பார்வதிதேவியார் பரஞானங்குழைத்த திருமுலைப்பாலை யூட்டியருள அந்நிலையில் சீவன்முத்தராய்ப் பரமானந்தவாரிதியில் என்றும் நீங்காது திளைத்துநின்ற எம்பிரானாரும் பிள்ளையாருக்குச் சிவபோதமாவது புருடபோகமாவது யாண்டையதென விடுக்க.

இச்சுத்தசாக்கிரம் மாயாவாதிகளது முத்தித்தானமாம்.

## பரை தரிசனம்.

பராசத்தியைத் தரிசனஞ்செய்யுநெறியுணர்த்துதலின் இப்பெயர்த்து.

42. கிரியை யறிவிச்சை கிளர்ந்தசத்தி யேதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய்—தெரியிலது
வாரு மறியா வகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற.

இ—ள்: கிரியை அறிவு இச்சை கிளர்ந்த சத்தி ஏதோ—இச்சாஞானக்கிரியாசத்திகள்தோன்றுதற்கு இடனாகிய சத்தி எதுவோ, பெரிய பராசத்தி எனப் பேசாய்— அதனைப்பெருமையையுடைய பராசத்தியெனக்கூறுதி, தெரியில் அது—ஆராய்ந்தறியின் அப்பராசத்தியானது, ஆரும் அறியா அகண்டபரிபூரணமாய்—எவராலுமறியப்படாத அகண்டாகார நித்தவியாபகப்பொருளாய், பெற பேரறிவாய் நிற்கும்— ஆன்மாக்களுண்மைஞானத்தைப்பெறுமாறு அதனையுணர்த்தி முற்றறிவாகிய இறைவனது பராசத்தியாய்நின்றருளும்.



இச்சாஞானக்கிரியாசத்திகள்தோன்றுதற்கிடனாதலிற் பெரிய பராசத்தி என்றார்.

43. அந்த வறிவு மறிவன்றோ விப்போது
தந்த வறிவுமது தானன்றோ—வந்த
வறிவிற் கிளைத்ததுகா ணவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர்.

இ—ள்: அந்த அறிவும் அறிவு— அந்த அறிவும் பேரறிவாகியபராஞானமெனப்படும் பராசத்தியேயாகும். இப்போது தந்த அறிவும் அதுதான்— இந்நிலையில் உனக்குக்கொடுத்தருளிய மெய்ஞ்ஞானமும் அப்பராசத்தியே கொடுத்ததாகும், அவ்வறிவு அந்த அறிவிற் கிளைத்தது— அந்த மெய்ஞ்ஞானம் அகண்டாகார நித்தவியாபகமாயுள்ள பராசத்தியின்கூறுயெழுந்தது, காண்— நீ அதனை அறிகுதி, அவ்வறிவிங்கேதோ— அவ்வறிவு இவ்விடத்து எத்தன்மையதென ஆராயின், நிறைவில் கிளைப்பு அற்ற நேர் —பராசத்தியின் நிறைவில் உன் ஆன்மபோத முனைப்பை அறுமாறு ஒழித்த தனிமையையுடையதாகும். அதனை அறிகுதி. இச்சுத்த சொப்பனத்திற்றான் மலவாசனையாகிய ஆன்மபோத முனைப்பு அறவே ஒழிக்கப்பட்டதாதலின் நிறைவிற்கிளைப்பற்ற நேர் என்றார்.

அற்ற-அறுமாறு செய்த "மலைவில்லாருளிய" என்றவிடத்து இல்லார்-இலதாகச்செய்தார் என்பதுபோலக்கொள்க. அவ்வறிவு என்றதை இரண்டிடத்துங்கூட்டுக. இரண்டு அன்றும், ஓ வும் அசை.

44. அறிவார்க் கறிவித்திங் கல்லாத தாகா
வறிவாய் விகற்ப மறியா—வறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல்.

இ—ள்: அறிவார்க்கு அறிவித்து — உண்மைஞானத்தை உணரும் பக்குவமுடையாருக்கு அதனையறிவித்து, அல்லாதது ஆகா அறிவாய்— பக்குவமில்லாத ஆன்மாக்கள் அறியாத அறிவாய், இங்கு விகற்பம் அறியா அறிவே காண் — இத்தன்மையில் வேறுபாடுடையதாய் வேறு விகற்பமின்றி என்றுமொரு பெற்றித்தாய்நிற்கும் அப்பராசத்தி அதனைத்தேருதி, கண் பெற்றோர் பெற்ற கதிர் ஒளிபோல் அதனைக்கண்டு—ஒளியையிழவாத கண்ணையுடையோர்பெறும் சூரியகிரணத்தின் ஒளிபோல அதனைக்கண்டு தரிசித்து, விண்பற்றாய் அதில் மேல் நில்—வினையவற்றுள்ள பற்றனைத்திலுக்கும் மேலாகிய பற்றினோடு இப்பரைதரிசனமாகும் மேல்நிலையில் நிற்பாயாக.

ஒளியிழந்த கண்ணையுடையோர் கதிரோனொளியைக் காணுதவாறு போல பக்குவரல்லாதார் தரிசிக்கவியலாத இப்பராசத்தி தரிசனத்தின்

அருமை பெருமையை யுணர்த்தவார் கண்பெற்றோர் கண்ட கதிரொளி போற் கண்டதனை எனக் கூறினர். ஏ, தேற்றம்.

## பரையில் வியாத்தம்.

பராசத்தியின் வியாபகஅறிவில் ஆன்மவறிவடங்கியதுவாய் நிற்றலின் இப்பெயர்த்து.

45. விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோல்—நண்ணி
பரைநிறைவில் நீயும் பதிவையே யாகி
உரையிறந்திட் டொன்றாவை யுற்று.

இ—ள்: விண்ணில் கதிரோன் விளங்கி விரிந்தது போல்—ஆகாயத்திற் சூரியன் விளங்கி அதனொளி உலகெங்கனும் விரிந்த தன்மைபோல, பரை நிறைவில்—அகண்டாகார நித்த வியாபகமாயுள்ள பராசத்தியின் நிறைவில், கண்ணிற் கதிரோன் கலந்தது போல்—கண்ணில் அச்சூரியனது ஒளி கலந்ததுபோல் வியாப்பியமாய்க்கலந்து, நீயும் நண்ணி பரை நிறைவில் பதிவையே யாகில்-நீயும் பரையினது சர்வவியாபகத்திற்சேர்ந்து அதில் அடங்கி நிற்பையாயின், உற்று உரையிறந்திட்டு ஒன்றாவை—நீயுமதிலடங்கி மௌனமாய் அப்பரையோடு இரண்டறக்கலந்து ஒன்றாவாய்.

பரையோடு இரண்டறக்கலந்து தன்செயலின்றி அருட்செயலாய் நிற்றலரிதென்பதனையுணர்த்தவார் பரைநிறைவில் நீயும் பதிவையேயாகில் என்றார்.

## பரையில் போகமும் போகமும்.

பராசத்தியோடுகூடி இரண்டறக்கலந்து தன்செயலின்றி நிற்றலேயும் பின் அதுவாய் ஆங்கு போகநுகர்தலேக் கூறுதலின் இப்பெயர்த்து.

46. விண்ணில் விகற்பமற மேவியகால் நின்றதுபோல்
நண்ணும் பரையதனில் நண்ணியே—எண்ணிறந்து
நீருறங்குந் தன்மைபோ னிற்கைபரை யோகமதிற்
சேருறலே போகமெனச் செப்பு.

இ—ள்: விண்ணில் மேவிய கால் விகற்பமற நின்றதுபோல்-ஆகாயத்தையிடமாகக்கொண்டு நிற்கின்றகாற்றுவேற்றுமையின்றி எங்கும்பரந்து அதனோடு நிற்கின்ற தன்மைபோல, நண்ணும் பரையதனில் நண்ணி—சர்வவியாபகமாய்க் கலந்து உலகைத்தொழிற்படுத்தி நிற்கின்ற பராசத்தியில் வியாப்பியமாயடங்கி, நீருறங்குந்தன்மைபோல் நிற்கை பரையோகம்—நீர் அசைவற்று உறங்குந்தன்மைபோலத் தன்செயலின்றிநிற்குநிலே, பரையில் யோகமெனப்படும். அதில் சேர் உறலே போகம் எனச் செப்பு—அந்நிலையில்



அதுவுந்தெரியாது நிற்றல் பரையிற்போகமென நீ அறிந்துகூறுதி மாணவகனே என்பதாம்.

பரைதரிசனமுதல் பரையிற்போகமீறாகவுள்ள நான்கு அவதரங்களும் சுத்தாவத்தையிற் சொப்பனம். இந்நிலையிலான்மா திருவருளோடுகூடினானே ஐந்தொழிலியற்றுகின்றவன் என முனைந்து நிற்கும். இது சிவசமவாதியின் முத்தித்தானமாகும். இதில் சிவரூபமும் ஆன்மதரிசனமும் உடன் நிகழ்வன.

## சுத்தபராயோகமுமுத்திச்சாக்கிரமும்.

ஆன்மாசத்திபெற்றுச் சிவத்தைத் தரிசித்தலின் இப்பெயர்த்து.

47. நீங்காத பேரறிவில் நீங்காமற் கண்டுநீ
நீங்காமல் நின்றபடி நின்றதனில்—நீங்காமல்
நின்றுவிட வன்றேதான் நின்மலன்றன் பேரறிவி
லொன்றுபட லென்று முரை.

இ—ள்: நீங்காத பேர் அறிவில்—என்றும் சிற்றறிவினனாகிய உன்னை விட்டுப் பிரியாது உடனாய்நின்று உணர்த்தும் பேரறிவாகிய பரையில், நீங்காமல் நீ கண்டு—அதன் சார்பாய் அதனை நீ மறவாமல் நின்று தரிசித்து, நீ நீங்காமல் நின்றபடி அதனில் நின்று— நீ பராசத்தியோடு நீங்காமல் ஒன்றாய் நின்றபடி இந்நிலையினும் அதனோடு நீ நின்று, நீங்காமல் நின்றுவிடல்— பின்னர் அதனைப்பிரியாது நிற்றல், நின்மலன் பேரறிவில்- அநாதிமலமுத்தராகிய பரசிவத்தின் பேரறிவாகிய பராசத்தியில், ஒன்றுபடல் என்னும் உரை— ஒன்றாய்க்கூடிநிற்றல் என்று இறைவன்றிருவாய்மலர்ந்தருளிய சுருதிசிவாகமங்கள் கூறும். அன்று, ஓ, தான் அசை.

48. எத்திசையு மொன்று மிறையருளி லேயழுந்தல்
சுத்தபரா யோகமெனச் சொல்லுமே—நித்தமறை
யத்தன்மை கண்ட லதுமுத்தி சாக்கிரமாஞ்
சித்த மயலறவே தேர்.

இ—ள்: எத்திசையும் ஒன்றும் இறை அருளிலே அழுந்தல்—எவ்வுலகினு மெப்பொருளினுமேகமாய் வியாபித்துநிற்குமிறைவனது பராசத்தியிலே அயராது அதனையே விடயித்துநிற்றல், சுத்தபரா யோகமென நித்த மறை சொல்லும்—சுத்தபராயோகமென்று நித்தியமாயுள்ள சுருதி சிவாகமங்கள் கூறும், அத்தன்மை கண்டால் அதுமுத்தி சாக்கிரமாம்—பராசத்தியோடு அழுந்தி நீ நிற்குமியல்பை நீ தரிசித்தால் அந்நிலை முத்திச்சாக்கிரம் எனப்படும், சித்தம் மயல் அற தேர் — அதனை உன் சித்தத்தின்கணுள்ள மயக்கம் நீங்கும்படி தெளிகுதி.

இறைவன் பிரதமசிருட்டியைத் தொடங்கியபொழுது தோன்றி என்றுமழியாது ஒடுங்கியும் விரிந்துநிற்றலின் நித்தமறை எனப்பட்டது. ஏ, இரண்டும் அசை.

### சாக்கிராதீதம்.

மேல்நின்ற நிலையுமறந்து அவ்வறிவிலவசமாய் நிற்றலைக்கூறுதலின் இப்பெயர்த்து.

49. நின்ற வறிவறிகை நீங்காமை சாக்கிரமா
மன்றி யவிழ்த லதீதமாஞ்—சென்றறிவை
நீங்காமை நின்று நெடிது துயில்கொளவே
வாங்கா தறிவாய் வர.

இ—ள்: நின்ற அறிவு அறிகை நீங்காமை சாக்கிரம்—அங்ஙனந் திருவருளோடு நீங்காமல் நிற்குநிலையை அறிதலை நீங்காமல் நிற்றல் சாக்கிரமெனப்படும், அன்றி—அதுவன்றி, சென்று அறிவை நீங்காமை நின்று—பேரறிவாகிய அருளைச்சார்ந்து அதனை நீங்காமல் நின்று, அறிவாய்வர வாங்காது நெடிது துயில் கொள—அத்திருவருளாகிய பேரறிவாந் தன்மையையடைய அதனைப் பிரியாது நெடிதே யவசமாய்க்கிடக்க, அவிழ்தல் அதீதமாம்—அவ்வறிவு சோர்ந்துநிற்குநிலை அதீதம் எனப்படும்.

ஆம், இரண்டும் ஏ யும் அசை.

### பரையிலதீதம்.

சாக்கிராதீதத்திற்கின்ற நிலையையும்விட்டுப் பரையோடு ஒன்றாய்நிற்றலைக்கூறுதலின் இப்பெயர்த்து.

50. இவ்வறிவு காண்ட லிருடீருஞ் சாக்கிரமா
மவ்வறிவு காணா ததீதமா—மிவ்விரண்டும்
பாராமல் நிற்றல் பரையி லதீதமா
மாரா வறிவகன்ற தால்.

இ—ள்: இவ்வறிவு காண்டல் இருள்தீரும் சாக்கிரம் — இறையருளிலே நீங்காமல் நிற்றலைக்காண்டல் சுத்தசாக்கிரம், அவ் அறிவு காணாதது அதீதம்—அந்நிலையில் நிற்றலைக்காணாது அநிலவசமாதல் சாக்கிராதீதம், இவ்விரண்டும் பாராமல் நிற்றல் பரையில் அதீதம்—மேற்கூறிய இரண்டு நிலையையும் பாராமல் நிற்குநிலை பரையிலதீதம் எனப்படும், ஆரா அறிவு அகன்றது—நிரம்பாது சுட்டறிவாய்நின்ற உன் அறிவு வியாபகமாய்ப் பேரறிவாயது அதனை அறிகுதி.

ஆம் மூன்றும், ஆலும் அசை.



51. ஈசனறி வாகியெல்லா மின்று கழன்றகன்றாய்
பாசமிக வைத்ததனிற் பற்றாதே—கூசாமல்
நேராக நீங்கியதில் நின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர.

இ—ள்: ஈசன் அறிவாகி இன்று எல்லாம் கழன்று அகன்றாய்—இறைவனது அருள்ஞானமே உன் அறிவாயதிலடங்கி ஒன்றாய்நின்றவிந்நிலையில் நான் எனதெனநின்ற முனைப்பும் ஏனைய மலங்களோடுமொருசேரக்கழன்று சுத்தனாயினாய், அதனில் பாசம் மிக வைத்து பற்றாமல்—நீ நீங்கிய தனுகரண புவனபோகங்களில் பழக்கவாசனையால் ஆசை பெரிதும்வைத்து அவற்றோடு சேராது, கூசாமல் அதில் நின்ற சுவடு அற நேராக நீங்கி—ஒரு சிறிதுங்கூசாமல் அவற்றோடு கூடி நின்ற பழக்கவாசனையுமற்றுப்போக அவனிலின்றுந் தனித்துநீங்கி, சிவமேல் வரவாராய்—மாணவகனே? நீ சிவத்தைச்சேர வருவாய். ஏகாரங்கள் அசை.

சுத்தபராயோகமுதல் பரையிலதீதமீறாகவுள்ள நான்கவதாரங்களுஞ் சுத்தாவத்தையிற் சுழுத்தி.

இவ்விடத்துச்சிவதரிசனமும் ஆன்மசுத்தியுமொருங்குநிகழும். இச்சுத்தசுழுத்தியை யடைந்தவழியுமுடலுள்ளளவும் பிராரத்தமுளதாதலின் அப்பிராத்தவனுபவத்து ஆகாமியமேறிப் பிறவிக்கேதுவாகும். சாக்கிராதீதந்துரியமிரண்டினுநிற்பவற்கேறாது இக்காரணத்தாற்றான். "பாசம்மிகவைத்ததனிற்பாராதே கூசாமல் நேராக நீங்கியதில் நின்ற சுவடறவே வாராய் சிவமேல்வர" என்று கூறினர். இதனை,

"இரிதரா வுடலில் வினைவரும் வருங்கா லிலகிய சாக்கிர தீதந் [தின்
துரியமென் றிரண்டி னின்றிடி னேறா சுழுத்திசொப் பனத்திற்சாக் கிரத்
மருவினும் வளரும் சகலத்தின் விரவி னவர்திறங் கிளப்பதென் மீட்டும்
பெருநிலை யழுந்த வவையெலா மழியும் பின்புபே துறுத்துவ தின்றே."

என்பதனுனறிக.

### சுத்தாவத்தை.

இச்சுத்தாவத்தையில் ஆன்மா இறைவனோடு ஏகனாகி இறைபணிநின்று மலமாயைகன்மங்களை அறவேயொழித்துப் பிறவியில் மீண்டுசெல்லா நிலையையடைதலின் இப்பெயர்த்து.

52. அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டொன்றுங் குறியா—நெறியேது
சுத்தவத்தை யைந்தாவுன் தொல்லைமல மில்லையில்லை
யத்துடனே செல்வதது வாம்.

இ—ள்: அறிவு அடையச் சென்று அங்கு அதீதமாய் நின்றருநி இறந்திட்டு — தன்னறிவு பரையோடொன்றுமாறுசென்று அந்நிலையிலவசமாய் நின்றதினையும் விட்டு, ஒன்றுங் குறியா நெறி ஏது — ஒன்றினையுமறியாத நெறியாது, மைந்தா சத்துவத்தை — என் மகனே அது சுத்தாவத்தை, உன் தொல்லை மலம் இல்லையில்லை — உன்னைப் பிறவியிற் செலுத்தும் பழையமலமாயைகன்மங்களொன்றும் அந்நிலையிலொருசிறிதுமில்லை, அது அத்துடனேசெல்வது — நீ ஏகனாகியிறைபணிநிற்கச் சுவடுமின்றி அழிந்துபோவது.

குருவுக்குச் சீடன் மைந்தன் என்னும் மரபானும், தமது சீடன் இனிப்பிறப்பிற் புகாத அரிய துரியநிலையையடைந்த மகிழ்வானும் மைந்தாவென ஆர்வந்தோன்ற வழைத்தவாறும். ஏ அசை.

## சுகரூபம்.

பதைப்பற்று ஆறியிருந்து சுகசோதியைத் தரிசித்தலின் இப்பெயர்த்து.

53. பைய விருந்து பதைப்பற்ற பின்னுனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே—ஐயனே
கண்டாய் சிவபூமி காட்சி யறக்கலந்து
கொண்டாள்வன் கண்டாய் குறித்து.

இ—ள்: ஐயனே! — என்னருமை மகனே! பைய இருந்து பதைப்பு அற்றபின் — நீ மெல்ல ஆறியிருந்து சிவபோதத்தானாய பதைப்பு நீங்கியபின், உனக்கு துய்ய சுகப்பிரபை தோன்றும் — உனக்குத் தூய்மையையுடைய பரமசுகத்தின் பிரகாசந்தோன்றும், சிவபூமி கண்டாய் — நீ இப்பொழுது பரமசுகத்தைப் பயக்குஞ் சிவபூமி ஆகிய அதனைக்கண்டாய், காட்சி அறக் குறித்து கலந்து கொண்டு ஆள்வன் — காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்னும் வேறுபாடுடைய காட்சிநீக்கச் சிறப்புவகையால் உன்னோடு இரண்டறக்கலந்து உடனாய் நின்று உன்னை இறைவன் ஆண்டருளும், கண்டாய் — அதனை நீ அனுபவத்திற் காண்பாய். உறுதிப்பற்றி எதிர்காலத்தை யிறந்தகாலமாகக்கூறினர். ஏ அசை.

54. விமுக்த வவதாரத்தில் விஞ்சு சகந்தா
னெழுந்ததிது வெங்கே யிறைவா—மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாமான்றன் பாலே யது.

இ—ள்: இறைவா! — என்குருநாதனே! விமுர்த்த அவதாரத்தில் விஞ்சு சகந்தான் இது எங்கே எழுந்தது — யான்மலமாயைகன்மங்களானாய துன்பத்தினின்று நீங்கி எம்பிரான் திருவடியில் வீழ்ந்து அதனையே தஞ்சமெனப்பற்றிநின்ற அவதாரத்து, இப்பெரியசுகம் எங்கேநின்றெழுந்தது?



மொழிந்தருளாய் — அதனைத் தேவரீர் மொழிந்தருளல்வேண்டும், அது மாமணியில் சோதி மலர்ந்த பிரபைபோல் அரன்பால் ஆம் — மிக்கெழுகின்ற அப்பெரிய சுகம் தன்னைக்கொண்டு ஒளியைக்காலாது தானே ஒளியைப் பரப்புமியல்பினையுடைய பெருமைவாய்ந்த மாணிக்கவிரத்தினத்தினின்று மெழுந்துபரக்குமொளிபோல் ஆன்மாக்களது அஞ்ஞானத்தை ஒழித்துப் பேரின்பத்தைக்கொடுத்தருளுமிறைவனிடத்து இயல்பாயுளதாகும்.

தான் ஏ அசைகள். "மறைய நின்றனன் மாமணிச் சோதியான்" என்பது நோக்குக.

55. துன்பமற்ற விந்தச் சுகப்பிரபை தன்னையே
இன்பசத்தி யென்று மிருக்காதி—அன்புறவே
நின்றதிலே யாறி நிலாவு நிலாவும்போல்
மன்ற றமணந்து வாழ்.

இ—ள்: துன்பம் அற்ற இந்த சுகப்பிரபை தன்னை — நீ மலமாயைகன்மங்களானாய துன்பம் நீங்கியவிடத்து அடைந்த விந்தச்சுகப்பிரபையை, இருக்கு ஆதி இன்ப சத்தி என்னும் — சுருதிசிவாகமங்கள் இறைவனது இன்பசத்தியெனக் கூறும், அன்பு உற — அன்புமீதூர, அதில் நின்று ஆறி — அவ்வின்பசத்தியினனுபவத்தில்நின்று ஆறி, நிலவும் நிலாவும் போல் மன்றல் மணந்து வாழ் — சந்திரனது பிரபை ஒன்றோடொன்று கலந்தாற்போல இன்புண்டாக அச்சுகத்தோடொன்றாய்க்கலந்து வாழ்வாய். நிலவும் நிலவும்போல் என்றது அபேதமாய்க்கலந்து நிற்குந்தன்மையையுணர்த்திற்று.

ஏகாரங்கள் அசை.

56. தேனாரு மின்பச் சிவவடிவ மிப்படியோ
வானாடர் காணாத மன்னவனே—ஞானா
விதுவுமொரு சத்தி யிறைவற் கிதானா
லெதுமுத்தி சொல்லா யினி.

இ—ள்: வானாடர் காணாத மன்னவனே! ஞானா! — அரிபிரமேந்திராதி தேவர்களாலுங் காண்டற்கரிய பரமாசாரியமூர்த்தியே எம் ஞானாசாரிய சுவாமிகளே!, தேன் ஆரும் இன்பச் சிவவடிவம் இப்படியோ? — பரமானந்தப்பெருந்தேன் நிறைந்து ததும்புஞ் சிவவடிவம் இத்தன்மைத்தோ? அதனைத் திருவாய்மலர்ந்தருளுவீராக, இறைவற்கு இதுவும் ஒரு சத்தி-என் மகனே எல்லாம்வல்ல இறைவனுக்கு இதுவுமொருசத்தி அதனை அறிகுதி, இது ஆனால் முத்தி எது இனி சொல்லாய் — இது இறைவனுக்கு ஒரு சத்தியானால் யாமடையும் முத்தி யாது? அதனை இனித் தேவரீர் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

## சுகாதீதம்.

சகருபத்திலவசமாய் நிற்குநிலையைக்கூறுதலின் இப்பெயர்த்து.

57. இந்தச் சுகத்தி லினிநீ விழியாமல
லந்த வறிவி னயர்ந்ததுபோற்—றொந்தமறப்
போதா யிதுவே சுகாதீதம் பொய்யற்றார்க்
காதார மான வருள்.

இ—ள்: இந்தச் சுகத்தில் இனி நீ விழியாமல்—இந்தச் சுகரூபத்தின் சுகத்தை இனி நீ பாராது, அந்த அறிவில் அயர்ந்ததுபோல்—அந்தப் பரை அறிவில் நீ நீங்கிய தன்மைபோல, தொந்தமற போதாய்—இந்நிலையின் தொடர்பு நீங்க இதைவிட்டுச்செல்குதி, இதுவே சுகாதீதம்—இதுவே சுகாதீதம் என்று சொல்வது, பொய் அற்றார்க்கு ஆதாரமான அருள் இதுவே—பாசஞான பசுஞானங்களாகிய பொய்ம்மையினின்று நீங்கிய முத்தான்மாக்களுக்கு என்றும் தாரகமாயுள்ள அருள் இதுவே. அதனை அறிகுதி.

இதுவே என்பதை இரண்டிடத்தும் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. எ-தேற்றம்.

58. ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி யொருபொருளு மாகாதே—நின்றழுந்திச்
சொல்லரிய விந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்றா னுமே நிலை.

இ—ள்: ஒன்றும் சுகவடிவுக்கு உள்ளான தம்பிரான் அன்றி—என்ஞானதுஞ் சுகரூபமாயமைந்துள்ள திருமேனியினுள்ளே பிரியாதெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானையன்றி, ஒருபொருளும் ஆகாது நின்று அழுந்தி—வேறொருபொருளுமாகாது அதினின்றழுந்தி, சொல்லரிய இந்தச்சுகத்துக்கு அதீதமாய்—அநுபவத்திற் காண்பதன்றி இத்தன்மைத்தென்று சொல்லுதற்கரிய இந்தச் சுகரூபத்தநுபவித்த சுகத்துக்கு அப்பாலாய், அவன் தானும் நிலை நில்—சிவோகம்பாவனையாற் பெறற்பாலதாய சிவமாநிலையில் நிற்குதி.

எ, இரண்டுந் தேற்றம்.

## சிவப்பேறு.

பாசிவத்தோடு என்றும்நீங்காது நிற்கின்ற நிலையைக்கூறுதலின் இப்பெயர்த்து.

59. எல்லாங் கழன்ற விடமே சிவமென்று
சொல்லாடு முன்னே சுருதிமறை—நல்லாய்கேள்
நின்ற படிதானே நிலையா வந்நிலையதனில்
நின்றுவிடு நேராக நீ.



இ—ள்: நல்லாய்கேள்—அடைதற்கரிய இந்நிலையையடைந்து பேரின்பானுபவத்திற்றலைப்பட்ட என் மகனே கேட்குதி, எல்லாங்கழன்ற இடமே சிவம் என்று—மலமெல்லாங் கழன்று திருவருளையும் மறந்தவிடமே சிவம் என்று, சுருதிமறை முன்னே சொல்லாடும்—சுருதிசிவாகமங்கள் பெரிதும் முழங்கிக்கூறும், நின்றபடி நிலை அதனில் நிலையாக—நீ இப்போ நின்றபடி அந்நிலையில் உறுதியாக, நேராக நீ நின்றுவிடு—ஒன்றாய் ஒப்புரவாக நீ நிற்குதி. எ-தேற்றம்.

60. வானகத்தில் வானும் மணத்தில் மணமும்போ
லான சுகப்பேற்றி லழுந்தியது—தானுகு
மாண்ட குருநாதா வடியேன் பெருவாழ்வை
மீண்டுசொல வுண்டோ விதி.

இ—ள்: வான் அகத்தில் வானும்—ஆகாயத்தினிடத்திலே ஆகாயமும், மணத்தில் மணமும்போல்—மணத்தோடு மணமும்போல, ஆனசுகப் பேற்றில் அழுந்தி—அபேதமாகக் கலந்ததனுலாய சுகப்பயனிலழுந்தி, அது தான் ஆகும்—அந்தச்சுகமே தானாகிய, அடியேன் பெருவாழ்வை—தேவரீரது அடிமையாகிய எனது பேரின்பப் பெருவாழ்வினது சுகத்தை, ஆண்ட குருநாதா—எத்துணையுஞ் சிறியேனுகியஎன்னையுங் கருணைவைத்து ஆண்டருளிய சிவகுருநாதனே! மீண்டுசொல விதி உண்டோ?—அநுபவத்திற் காண்பதன்றி உரையின் வரம்பைக் கடந்த பரமசுகத்தைக் கற்பித்துக் கூறப் பிரமாணமுண்டோ? இல்லை என்றபடி.

61. நீயுஞ் சிவமுமாய் நின்றாயோ நின்றிலையோ
வாய வடியேனு வதிகாரம்—நாயனே
ஒன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை.

இ—ள்: நீயுஞ் சிவமுமாய் நின்றாயோ நின்றிலையோ?—மாணவகனே நீயுஞ் சிவமுமாய் ஒன்றுபட்டு நிற்கின்றாயோ அல்லது நிற்கவில்லையோ? அதனைக் கூறுதி, நாயனே ஆய அடியேனு அதிகாரம்—என் குருநாதனே அதனை யாராய்தற்குத் தேவரீருடைய அடிமைக்கு அதிகாரமுளதோ? இல்லை, நின்றதொரு தன்மை நிலை—யான் சிவத்தோடு இரண்டறக்கலந்து ஒரு தன்மையாக நின்றநிலை, ஒன்று அன்று—கேவலாத்துவிதி சொல்லும் ஒன்றாய தன்மையன்று, இரண்டன்று—பேத வாத சைவர்முதலியோர் கூறும் இரண்டாயநிலையுமன்று, இரண்டு ஒன்றுதான் அன்று—சிவாத்துவித சைவர் முதலியோர் கூறும் இரண்டுபொருளும் ஒன்றாய் நிற்குநிலையுமன்று, வேறென்னிலையோவெனிற் சித்தாந்தசைவத்திற் கூறிய சுத்தாத்துவித நிலையாகும்.

கேவலாத்துவிதி முதலிய மூன்று மதத்தினரையும் அவர்போன்ற ஏனைய மதத்தினரையுங் கண்டித்தபடி காண்க.

62. சாற்றி லதற்குவமை தாடலைபோற் சன்மார்க்க
வேற்று விதிபலவும் வேண்டாவே—போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
அத்தனே முத்தனே யாங்கு.

இ—ள்: போற்றரிய நித்தனே?—எவராலும் இத்தன்மையனென்று அறிந்து துதித்தற்கரிய நித்தியப்பொருளே, சுத்தனே-மலரகிதனே, நித்தியானந்தனே—நித்தியானந்தசொரூபியே, அத்தனே—ஆன்மாக்களிடத்துயிர்க்குயிராய் நிற்குந் தலைவனே, முத்தனே-அநாதிமலமுத்தனே, ஆங்கு அதற்கு உவமைசாற்றில்-அன்னிலையில் அதற்குவமைகூறவேண்டில், தாடலைபோல்-தாள் தலையென்னுமிருசொல்லுந் "தாடலை"யென வேற்றுமையின்றி ஒன்றுசப்புணர்ந்து நிற்குந் தன்மையாகும், சன்மார்க்க வேற்றுபல விதியும் வேண்டா— அது வன்றி வைதிகசைவத்திற் சொல்லப்பட்ட வேறுபல பிரமாணங்களும் வேண்டுவதில்லை. தாடலை போல் என வைதிகசைவ சுத்தாத்துவிதமுத்திநிலையே தனது முத்தி நிலையென விண்ணப்பஞ் செய்தபடி.

குருவேசிவம் எனக்கொண்டு மேற்கூறியவண்ணம் மாணவகன் விண்ணப்பஞ்செய்த வாறும்.

63. அந்தச் சுகத்துக் கதீத வவத்தையென்பர்
பந்தமற்ற முத்திப் பயனறியார்—அந்தோ
பிரியாத வின்பப் பெருமானைப் பெற்று
மறியாத வாதனையா லாங்கு.

இ—ள்: பிரியாத இன்பப் பெருமானைப்பெற்றும்—என்றுந்தம்மை விட்டுப் பிரியாத இன்புருவனாகியபிரானுரோடு தாடலைபோல் கலந்து நிற்கப் பெற்றும், அறியாதவாதனையால்- அறியாமையோடு கூடிய பழக்கத்தால் ஆங்கு-அன்னிலையில், பந்தம் அற்ற முத்தி பயன் அறியார்-மலபந்தமில்லாத பரமுத்தியிற் பெறும் பரமானந்த சுகத்தியல்பறியாதவர், அந்தச்சுகத்துக்கு அதீத அவத்தை என்பர்—தாடலைபோல் நிற்குநிலையிற் பெறுஞ் சுகத்திற்குப் பரமானந்த அவச நிலையாகிய அதீத அவத்தையென்று கூறுவர். அந்தோ—ஐயகோ, அவரறியாமை யிருந்தபடியென்னே!!

## பரமானந்த தரிசனம்.

பரபோகத்தின்கண்ணதாய பரமானந்தத்தைத் தரிசித்தலின் இப்பெயர்த்து.

64. நின்றநிலை சிவமாய் நின்றுயே நின்மலனு
மென்றும் பயனா யிருந்தானே—யன்றே
அவனுக் கிதமே தவனாகி நின்ற
விவனுக் கிதமே தினி.

இ—ள்: நின்றநிலை சிவமாய் நின்றாய்-மகனே நீ நிற்கின்றநிலை சிவமாய் நிற்குநிலையாகும், நின்மலனும் என்றும் பயனாய் இருந்தான்- நின்மலக் கடவுளாகிய சிவமும் நீ என்றுந் துய்த்தற்குரிய இன்பப் பொருளாயிருக்கின்றான். அன்றே அவனுக்கு இதம் எது—பண்டு தொடங்கியே அப்பிரானுருக்கு இன்பம் எவ்வாற்றானாயது, இனி அவனாகின்ற இவனுக்கு இதம்எது-இனி அச்சிவமாய் நின்ற எனக்கு இன்பானுபவம் எவ்வாறமைந்தது. என் குருவே அதனைத் திருவாய்மலர்ந்தருளுவீராக.

ஏகாரங்கள் அசை.

65. அன்றே துடங்கி யனைத்துயிருந் தானாகி
யொன்றாகி நின்றவருக் கின்பூட்டிக்—குன்றாமற்
கொண்டுவிட லன்றோநங் கோமாற் கிதமென்று
பண்டை மறை சொல்லும் பரிந்து.

இ—ள்: அன்றேதுடங்கி அனைத்துயிரும் தானாகி ஒன்றாகிநின்று—பண்டுதொட்டு அவையே தானேயாய் எல்லாமாயிருந்தானாகி ஏகமாய்நின்று, அவருக்கு குன்றாமல் இன்பு ஊட்டிக்கொண்டு விடல்—அவ்வான்மாக்களுக்கு குறைவில்லா நிறைவாகிய இன்பசுகத்தை நுகருமாறு கொடுத்துத் தன் திருவடிக்கீழலிற் சேர்த்துக்கொள்ளுதல், நம்கோமாற்கு இதம் என்று—எம்மான்மகாயகராகிய இறைவற்கு இன்பமாகுமென, பண்டைமறைபரிந்து சொல்லும்—ஆன்மாக்கள் மீது கொண்ட கருணையால் அன்றே இறைவன் திருவாய்மலர்ந்தருளிய சுருதிசிவாகமங்கள் பரிவோடு கூறுவன.

அன்று, ஓ, அசை.

66. பார்க்கரிய விந்தப் பரமசுகந் தன்னைச்
சேர்ப்பனுயிர்க் கென்றிறைவா செப்பினையே—மாற்றரிய
வானந்த மாருயிர்கட் கண்ண லருத்துவது
தானெங்குப் பெற்றவா சாற்று.

இ—ள்: பார்க்க அரிய இந்த பரமசுகந்தன்னை-இத்தன்மைத்தென்று எவராலுமறிந்து சொல்லுதற்கரிய இப்பேரின்பத்தை, உயிர்கட்கு சேர்ப்பன் என்று இறைவா செப்பினை—ஆன்மாக்கள் நுகருமாறு எம்பிரானூட்டியருளுவாரென்று சிவகுருவே தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர், மாற்றரிய ஆனந்தம் ஆருயிர்கட்கு அண்ணல் அருத்துவது—எவ்வாற்றாலும் என்றும் மாற்றுதற்கரிய நித்தியமாகிய பேரின்பத்தை ஆன்மகோடிகளுக்கு எம்மிறைவனூட்டுவது, தான் எங்குப் பெற்றவாறு சாற்று—அவ்வின்பத்தை அப்பிரானுர் எவ்விடத்துப்பெற்றூர் அதனைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

அநுபவத்திற் காண்டலேயன்றிக் கற்பனைக்கப்பாலாயுள்ளதென்பார் பார்க்கரியவிந்தப் பரமசுகம் என்றார். ஏ அசை.

67. பெற்றருந்தி யின்பம் பிறர்க்கு மருத்தினனோ
உற்றபர மானந்த முள்ளதோ—மற்றிதுதா
னென்றுநீ கேட்கி லிறையுருவ மானந்த
மென்றுரைக்கு மாகமநூ லின்று.

இ—ள்: இன்பம் பெற்று அருந்தி பிறர்க்கும் அருத்தினனோ— இப் பேரின்பத்தை இறைவன் பிறிதோரிடத்திற்பெற்று அதனைத் தாமனுபவித்துப் பின் ஆன்மாக்களுக்கு மூட்டியருளுகின்றாரோ, உற்ற பரமானந்தம் உள்ளதோ?— இறைவனிடத்துள்ள பரமானந்தம் இயல்பா யவருக்கமைந்துள்ளதோ, இது என்று நீ கேட்கில்—இதனை நீ கேட்பாயாயின், இறை உருவம் ஆனந்தம்—எம்மிறைவானது திருவுருவமே ஆனந்தவடிவம், அன்றி வேறு ஒன்றும் இல்லை— அவ்விறைவனது திருவுருவமேயன்றி ஆனந்தமெனப்படும் பொருள் வேறில்லை மாணவகனே இதனை நீ அறிகுதி.

மற்று வினைமாற்று. தான் இன்று அசை.

68. ஆனபர மானந்த மாகின்ற எல்லையே
ஊனமிலா உண்மைதனி லொன்றுபடல்—ஈனமறத்
தானுன போது தணவா தெழுந்தசுக
மானே யதுவா மதி.

இ—ள்: ஆன பரமானந்தம் ஆகின்ற எல்லையே—இன்புருவாகிய பரமானந்தமென்று சொல்லப்படுமந்நிலையே, ஊனமிலா உண்மைதனில் ஒன்றுபடல்—சலனமில்லாது என்றுமொருதன்மையாயுள்ள பரசிவத்தோடு ஒன்றுபடுதல், ஈனம் அற தான் ஆனபோது — உயிர்க்குள்ளகுற்ற நீங்க அச்சிவமேயானபொழுது, தணவாது எழுந்த சுகம்-என்றுமநீங்காதெழுந்த பரமசுகமானது, மானே அதுவா மதி—இவ்வடைதற்கரிய பெருநிலையையடைந்த மகான் என்றழைக்கப்படும் பெருமைவாய்ந்த என்மகனே அப்பரமானந்தமெனவறிகுதி. ஏ பிரிநிலை.

## பரமானந்தயோகம்.

பரமானந்தத்தோடு ஒன்றுதல் கூறுதலின் இப்பெயர்த்து.

69. விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்து துளைந்தாடி யதிற்றோன்று—வளைந்துன்னை
நீர்போ லமிழ்த்தியதன் நீள்நிழல்போற் றான்காந்து
பார்போற் றரிப்பாகும் பார்.



இ—ள்: விளைந்த பரமானந்த வெள்ளந்தனில் — இங்ஙனமெழுந்த பரமானந்தமெனும் வெள்ளத்தில், துளைந்து துளைந்து ஆடி— நுழைந்து நுழைந்து மூழ்கி, நிற்கில் அதில் தோன்றா உன்னை வளைந்து-அப்பரமானந்தத்தில் நீ தோன்றாவண்ணம் உன்னைச்சூழ்ந்து, நீர் போல் அமிழ்த்தி—நீர்போல உன்னை அமிழ்த்தி, அதன் நீள் நிழல்போல் காந்து— அந்த நீரினது பெரிய நிழல் பிறர்க்குப் புலனாகாதவாறுபோல் உன்னைத் தெரியாவண்ணம் மறைத்து, பார்போல் பரிப்பாகும்—நிலம்போல உன்னை என்றுந் தன்னிடத்து வைத்துக்கொள்ளும், பார் — அதனைத் தெளிகுதி. ஏ அசை.

70. பாராதே அந்தப் பரம சுகந்தன்னை
சோராகத் தாணு நிலைபோலத்—தீராச்
சுபாவ மதுவாகத் தோன்றி மறையாதே
அபாவமாய் நில்லா யதில்.

இ—ள்: அந்த பரமசுகம் தன்னை பாராது — அந்தப் பரமானந்தத்தைப் பாராது, தாணு நிலைபோல சோராக—இறைவன் என்றுமோரியல்பாய் நிற்கு நிலைபோல நீயும் அத்தன்மையாய் தீரா சுபாவம் அதுவாகி— அந்நிலையினின்று நீங்காது அத்தாணுவின் தன்மையாகி, தோன்றி மறையாது— அப்பரமானந்தம் ஒருகாற்றோன்றி ஒருகால் மறையாது, அதில் அபாவமாய் நீ நில்—அப்பரமானந்தத்தில் நீ என ஒருபொருளின்றி அதுவாய் நிற்குதி.

ஏ, ஆய் அசை. சுத்தாவத்தைமுதற் பரமானந்தமிறுவாயாகக்கூறிய ஆறு அவதாமுந்துரியம். இதுசிவயோகம். இந்நிலையையடைந்தவர் மீண்டு பிறவார்.

## பரமானந்தபோகம்.

பரமானந்தானுபவத்தைக் கூறுதலின் இப்பெயர்த்து.

71. நின்றபர மானந்த நேரே யனுபவித்தங்
கொன்றுபட வுள்ளுருகி யோவாம—லென்றும்
மதுவுண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது.

இ—ள்: நின்ற பரமானந்தம் நேரே அனுபவித்து— நீ இரண்டறக் கலந்துநின்ற பரமானந்தத்தைப் பெரிதுமனுபவித்து, அங்கு ஒன்றுபட உள்ளுருகி—அந்தப் பரமானந்தத்தில் ஒன்றாய் மனநெக்குநெக்குருகி, மது உண்ட வண்டுபோல்—தேனையுண்ட வண்டுபோல, மாளாச்சுகத்தை என்றும் ஓவாமல் புதிது உண்டு—என்றுமொழியாத பரமானந்தத்தை இடையீடின்றிப் புதிது புதிதாகவுண்டு, இப்போது இருந்துவிடு—இந்நிலையில் நீயிருப்பாய்.

"கொடியிடைதோள், புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய், மணந்தாள் புரிகுழலாளல்குல்போல வளர்கின்றதே" என்பது நோக்குக. பதினொராண்டும் பத்துத்திங்களுமெய்தியவழி வளர்தலொழிந்து என்றுமோரியல்பாய்நிற்குமல்குல் தன்னையடைந்தார்க்கு என்றும் புதிதுபுதிதாய்த் தெவிட்டாதவின்பத்தைப் பயப்பதுபோல என்றுமோரியல்பாகிய இறைவன் திருவடியையடைந்த ஆன்மாக்கள் தெவிட்டாத பரமானந்தத்தை யனுபவிக்குமாறு புதிது புதிதாகிய இன்பத்தைத் திருவடி கொடுத்தருளும் என்பதாம்.

72. பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
யுருகியடி யேனருந்த வூட்டுங்—குருவே
யழியாத வின்ப மரனருந்தா னென்னும்
வழியேது சொல்லீர் மகிழ்ந்து.

இ—ள்: பருகத் தொலையாப் பரபோகம் தன்னை — என்றுமுண்ணத் தொலையாத பரமானந்த பரபோகத்தை, அடியேன் உருகி அருந்த ஊட்டும் குருவே—தேவரீருடைய அடிமை நெக்கு நெக்குருகி ஆனந்தத்தின் மூழ்கி உண்ணுமாறு பெருங்கருணையால் ஊட்டியருளுங் குருநாதனே? அழியாத வின்பம் அரன் அருந்தான் என்னும் வழி ஏது—என்றுமழியாத பரமானந்தத்தை ஆன்மாக்களது மலத்தை யொழித்துத் தன்திருவடிக்கீழலிற் சேர்த்தருளுமிறைவன் அனுபவியான் என்று கூறும் முறை எக்காரணத்தானோ மகிழ்ந்து சொல்வீர்—அதனைத் தேவரீர் கருணைகூர்ந்து திருவாய்மலர்ந்தருளல்வேண்டும்.

73. சர்க்கரை தானார்க்குந் தருமிரத மவ்விரதஞ் [கின்
சர்க்கரை தான்கொள்ளுமோ சாற்றுங்கால்—சர்க்கரைக்
கின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
வின்புருவ மேயிறைக்கு மென்.

இ—ள்: சர்க்கரை தான் ஆர்க்கும் இரதம்தரும்—சர்க்கரையானது எல்லோர்க்கு மினிமையைக் கொடுக்கும், அவ்விரதம் சர்க்கரைதான் கொள்ளுமோ—அந்த வினிமையைச் சர்க்கரை யனுபவிக்குமோ? அன்று, சாற்றுங்கால் — ஆராய்ந்து சொல்லுமிடத்து, சர்க்கரைக்கு இன்புருவம் அன்றி வேறு எழில் உருவம் உண்டோ இன்று — சர்க்கரைக்கு இனிமையே யுருவமன்றி அதனினுஞ்சிறந்த அழகியவுருவம் வேறுயுண்டோ இல்லை, அதுபோல இறைக்கும் இன்பு உருவமே என்—எப்பொருட்கு மிறைவராகிய பிரானுர்க்கும் இன்பே உருவம். அதனைத்துணிந்து சொல்.



74. நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மறியுமோ—ஓவாப்
பரம சுகமுன் பாற்பலிப்ப தேயன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன்.

இ—ள்: நா ஆர் இரதம் அது நா அருந்தல் அல்லாது—நாவேயறிந்து அனுபவிக்குஞ் சுவையை நா அனுபவித்தலேயல்லாது, இரதம் அறியுமோ—அதனை அந்த விரதமனுபவித்தறியுமோ, இன்று. அதுபோல, ஓவா பரம சுகம் உன்பால் பலிப்பதே அன்றி—என்று நீங்காத பரமானந்தமாகிய சுகம் உன் அனுபவத்திற்குரியதேயன்றி, பரம சுகம் பயன் கொள்ளாது—அப்பரமசுகசொரூபியாகிய இறைவன் அதனையனுபவியான்.

இங்கு, ஆ ஆ அசை. ஓ எதிர்மறை.

75. இந்தச் சுகமான்ம லாபமென வறிநீ
யந்தச் சுகமொழிந்திங் காராதே—இந்தச்
சுகமெலா மந்தச் சுகமாக்கி னுன்ற
னகமெலா மானந்த மாம்.

இ—ள்: இந்தச்சுகம் ஆன்மலாபம் என நீ அறி—இந்தப் பரமானந்தமாகிய சுகமேயான்மலாபமென நீயறிகுதி, அந்தச் சுகம் இங்கு ஆராதே ஒழிந்து—இந்த ஆன்மலாபமாகிய சுகத்தை இன் நிலையினின்று நுகராது, இந்த சுகம் எலாம் அந்த சுகம் ஆக்கில்— இந்தப் பரமானந்தமாகிய சுகம் அந்தச் சுகசொரூபியாகிய இறைவனதேயெனக் கண்டு அப்பிரானுரது திருவடியிலமிழ்ந்தினுல், உன் தன் அகமெலாம் ஆனந்தமாம்— உனது உடம்பு முழுதும் ஆனந்த வடிவமாய் விளங்கும் அதனை அறிகுதி.

"அன்பு பிழம்பாய்த்திரிவார்" என்பது நோக்குக. திரிதல்—மாறுதல். ஏ அசை.

## பரமானந்த மேலீடு.

பரமானந்தமதிகரித்து எல்லாப்பொருளையும் ஆனந்தவடிவாகக்காண்டலின் இப்பெயர்த்து.

76. அண்ண லுமா னந்த மருளுமா னந்தமுயி
ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும்—பண்ணி
யளித்தழிப்பா ராரு மவருமா னந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண்.

இ—ள்: அண்ணலும் ஆனந்தம்—எப்பொருட்குமிறைவராகிய பிரானுருமானந்தவடிவம், அருளும் ஆனந்தம்— அவ்விறைவனது திருவருளுமானந்தவடிவம், எண்ணிலா உயிர் ஆனந்தம்—அளவிறந்த உயிர்களுமானந்தவடிவம், எவ்வுலகும் பண்ணி அளித்து அழிப்பார் ஆரும் அவர்களும் ஆனந்தம் — எல்லாவுலகங்களையும் படைத்துக் காத்து அழித்தருளும் மும்மூர்த்திகளும் ஆனந்தவடிவம், அதுவே எப்போதுங் களித்துக் காண்-எல்லாப்பொருளுமானந்தம்பயக்குமானந்தவடிவத்தை எப்போதுமானந்தத்தோடு பார்.

இன்புருவனுகிய இறைவனும் இறைவன்வழிநின்று தொழிற்படும் எல்லாப்பொருள்களும் ஆன்மாக்களை யிறைவன் திருவடிநீழலிற்சேர்த்தற் காயபணியில்நிற்கின்றதென்பதைக்கண்டு, இறைவனது கைமாறுகருதாப்பெருங்கருணையை அயராது நினைந்து நினைந்து பரமானந்தத்தையனுபவிப்பாய் என்பதாம்.

77. எங்குநிறைந் தானந்த மெல்லா மமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமா—யங்கு
வளைத்த வுலகுயிரும் வாய்த்த சுகமா
மளத்திற் புகுந்ததுபோ லாங்கு.

இ—ள்: ஆனந்தம் எங்கு நிறைந்து எல்லாம் அமிழ்த்தி—இத்தன்மைத்தானவானந்தமெல்லாவுலகுநிறைந்து எல்லாப்பொருள்களையும் மூடி, மிகப் பொங்கி கரைபுரண்டு—மிகப்பெருக்கெடுத்து வரம்பையுடைத்து, பூரணமாய்—எங்குக்குறைவில்லாதநிறைவாய், அங்கு வளைத்த உலகு உயிரும் வாய்த்த சுகமாம்— அந்நிலையில் பரமானந்தத்தாற் சூழ்ந்து மூடப்பெற்ற உலகும் உயிரும் இந்நிலையில் நீ காணுமாறுவாய்த்த சுகவடிவமாகும், அது எதுபோலெனின், அளத்தில் புகுந்தது அது ஆங்குபோல்— உப்பளத்திற் சேர்ந்த பலாலம் முதலிய பொருள் தமது வடிவையிழந்து அவ்வுப்பாய் அவ்விடத்துச் சமைந்ததுபோலாகும். அதனைக்காண்குதி.

78. கண்டவிட மெல்லாங் கருணைக் கடலமுத
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப்—பண்டே
திருமா லயனறியாத் தேசிகனார் பாதந்
தருமடி யேற்குத் தான்.

இ—ள்: கண்ட இடம் எல்லாம் கருணை கடல் அமுதம் மொண்டுகொளல் ஆய் நிறைந்த முத்திதனை-பார்த்தவிடமெல்லாம் இறைவனது கருணாசமுத்திரத்தில் கடைந்தெடுத்த பரமானந்தமாகியவமுதத்தை மொண்டுகொள்ளுமாறு நிறைந்திருக்கின்ற பரமுத்தியை, பண்டு திருமால் அயனறியா தேசிகனார் பாதம்—பண்டோர் ஞான்று திருமால் பிரமாவாகிய இருவருந்தேடிக்காணாத எமது தேசிகத்தெய்வத்தினது திருப்பாதம், அடியேற்கும் தருமாம் — அப்பிரானுாது அடிமையாகிய புழுத்த நாயினுங் கடையேனுகிய எமக்குந்தந்தருளியது. எம்பிரான் கருணையிருந்தபடி என்னே!

### பரமானந்தவவசம்.

பரமானந்தத்தில் தன்செயலற்று அதுவாய் அடங்கிநிற்குநிலை கூறுதலின் இப்பெயர்த்து.

79. பரமபர மானந்தம் பார்கீழ்மேல் மற்று
மரவம் வாராதே யகலும்—புரணமா
யாங்கே யமிழ்ந்தி யவசமா மானந்த
நீங்கா ததுவாகி நில்.



இ—ள்: பரம பரமானந்தம் பார் கீழ் மேல் மற்றும்— மிகுந்த இறைவனது கருணையாகிய பரமபரமானந்தமானது நிலம் பாதலம் விண் முதலிய உலகங்களில், அரவம் வாராதே அகலும்—ஆரவாரமின்றிப் பரக்கும், புரணமாய் ஆங்கே அமிழ்ந்தி—நீயதிற் புரண்டு அதிலே மூழ்கி, அவசம் ஆம் ஆனந்தம் — நீ அவசமாய்க்கிடக்கின்ற ஆனந்தத்தை, நீங்காது அதுவாகி நில்—என்றுநீங்காது அவ்வானந்தமாய் நின்றுவிடு. இதுவே முத்திமுடிவு.

௭-அசை.

80. உற்றபர மானந்தத் தொன்றா யதிலுறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்குங்—குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாந் தெளி.

இ—ள்: உற்ற பரமானந்தத்து ஒன்றாய் அதில் உறங்கி — நீயடைந்துய்க்கின்ற பரமானந்தத்தோடு ஒன்றாகக்கலந்து அப்பரமானந்தத்திலவசமாய்த்துயின்று, முற்றுவதே முத்திமுடிவு என்று-அப்பரமானந்தமாய்க்கிடப்பதே முடிவாகிய பரமுத்தியென்று, வைதிக சைவம் வழிநூல்— வைதிக சைவத்துக்குப் பிரமாணமாகிய சுருதிசிவாகமங்களுமவற்றின்வழி தோன்றிய ஏனைய நூல்களும், புராண மற்றும் செய்வன நூல் எல்லாம்— புராணங்களும் அவற்றின்வழிவந்தநூல்களும், உரைக்கும்- கூறும், தெளி- அதனை நீ தெளிகுதி.

மேல் மூன்று அவதாரங்களுந் துரியாதீதம்- தசகாரியத்தில் சிவபோகம். மற்று வினைமாற்று.

### அருவகை.

ஆன்மாக்களின் வெவ்வேறாய இயல்பைக் கூறுதலின் இப்பெயர்த்து.

81. ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளவுயிர் மூவர்க்குஞ்
சென்றிவன்போல் நேரே சிவமாகி—நின்றநிலை
யிவ்வகையே யாளு மெழிற்குருவா மீசனே
யவ்வகையை நீயங் கறி.

இ—ள்: ஒன்று இரண்டு மூன்று மலம் உள்ளஉயிர் மூவர்க்கும்—ஒருமலமுடையவிஞ்ஞானகலர் இருமலமுடைய பிரளயாகலர் மும்மலமுடைய சகலர் எனப்படும் முத்திறத்தான்மாக்கட்கும், இவன் போல் சென்று—மும்மலமுடைய சகலர்க்கு மானுடவடிவத்தோடு எழுந்தருளிச்சென்றும், நேரே சிவமாகி—இருமலமுடைய பிரளயாகலருக்கு மான் மழு சதுர்ப்புயம் முதலியவமைந்த சிவவடிவத்தோடு எதிர்முகமாக எழுந்தளிச்சென்றும், நின்ற நிலை—ஒருமலமுடைய விஞ்ஞானகலருக்கு உயிர்க்குயிராய் என்று நின்றவண்ணமே நின்று அறிவுக்கறிவாயுணர்த்தியருளியும், எழிற் குருவாம் ஈசனே ஆளும்—ஞானசொருபியாகிய குருவாகும் இறைவனே ஆட்கொண்

டருளுவர், அவ்வகையை நீ அங்கு அறி—அத்தன்மையை நீ உன்னையாட் கொண்டமுறையானறிகுதி.

முன்னின்றருளுதலை:—

"மைக்களமு மான்மழுவும் வரதமுட னபயமுறு
மெய்க்கரமு நாற்புயமும் விளங்குபணிக் கொடும்பூணுஞ்
செக்கருறு மதிச்சடையுஞ் சேயிழையோர் பாகமுமாய்
முக்கணிறை யாங்காண முன்னின்றே யருள்புரிந்தான்."

எனவுங்கூறியிருத்தல் காண்க. எ தேற்றம்.

## பஞ்சாக்கர தரிசனம்.

ஐந்தெழுத்தையு மவற்றானுணர்த்தப்படும் பொருளையும் ஓதுமுறையினையும் படனையுங் கூறுதலின் இப்பெயர்த்து.

82\. அஞ்செழுத்து மண்ணலரு ளான்மாத் திரோதமல
மிஞ்சி நமத்துரந்து மெய்யருள்வாத்—தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா வின்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய்.

இ—ள்: அஞ்செழுத்தும் அண்ணல் அருள் ஆன்மா திரோதம் மலம்—ஐந்தெழுத்தும் முறையே சிகாரம் இறைவனையும் வகாரந் திருவருளையும் யகாரம் ஆன்மாவையும் நகாரந் திரோதானசத்தியையும் மகாரம் மலத்தையுமுணர்த்துவன, மிஞ்சி நம துரந்து—திருவருள் மேம்பட்டு நகாரம் மகாரம்இரண்டனையுநீக்கி, மெய் அருள்வா தஞ்ச சிகாரத்தில் யவ்வை-இறைவன்திருவருளாகிய வ யகாரமாகிய உயிரை என்று மவ்வுயிருக்குத் தஞ்சமாயுள்ள சிகாரமாகிய சிவத்தில், தீது இலா இன்ப புகாரிற் போய் புகுந்து அருந்த விடும்— குற்றமொன்றுமில்லாத அவ்வின்புருவிற் போய்ப் புகுந்து அகருமாறு விடுத்தருளும்.

## குருத்துதி.

ஞானதேசிகனைத் துதித்தலி னிப்பெயர்த்து.

83\. பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றவுயிர் காட்டி யுணர்வுணர்த்தி—யற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று.

இ—ள்: பற்றி நின்ற பாசம் பறித்து அகல—உன்னை அனாதியேபற்றி நின்ற ஆணவமலபந்தத்தைப்பறித்து அதன்வாயிலாகவருமாகாமியகன்ம நீங்க, விழித்திட்டு—உனது சஞ்சிதகன்மநீங்குமாறு நயனதீக்கைசெய்தருளி, உற்ற உயிர் காட்டி — சுத்தியடைந்தநிலையில் உயிரைக்காட்டி, உணர்வு உணர்த்தி— ஞானோபதேசஞ்செய்தருளி, சிவப்பேறு தந்து—ஆ



ன்மலாபமாகிய சிவப்பேற்றைக்கொடுத்தருளி, சிவபோக வாரி புக— சிவபோகமாகிய சமுத்திரத்திலழுந்திப் பரமானந்தத்தில் அவசமாய்த்துயிலுமாறு, பேறளித்தவரை போற்று— பெறுதற்கரிய பெரும்பயனை என்றுந் துய்க்குமாறு உனக்குத் தந்த பரமாசாரியரை என்றுமயராது போற்றுதி.

## சீடவிலக்கணம்.

சீடனுக்கு இன்றியமையாத விலக்கணங்கூறுதலின் இப்பெயர்த்து.

84\. இரவு பகல்நிழல்போ லிட்ட பணிசெய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித்—திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர்.

இ—ள்: இரவு பகல் நிழல்போல் இட்ட பணி செய்து—இரவும் பகலும் உடலும் நிழலும் போலக் குரவனைப்பிரியாதிருந்து அவரிட்ட ஏவலைச்செய்து, குரவர் புகழ் வாயாரக் கூறி—ஞானசாரியரது புகழை வாயாரப்பாடி, திருமுன் விழுந்து— குரவனது திருச்சன்னிதானத்து விழுந்து வணங்கி, விழிநீர் பொழிய மெய்விதிர்த்து நின்று— கண்களினின்று மானந்த அருவி சொரிய உடலம் நடுநடுங்கநின்று, தொழுந்தவத்தோர் சுகர்—தொழுகின்ற பெருந்தவத்தையுடையவர்களே சீவன்முத்தராகுஞ் சுகானுபவத்தையுடையவர்கள், காண்—அதனைத்தெளிகுதி. உம் அசை.

## முத்தனுக்கு முத்தியின்மைகூறல்.

முத்திப்பயனைப்பெற்றவனப்பயனை யிழத்தற்குக் காரணங்கூறுதலின் இப்பெயர்த்து.

85\. ஆகமுத னீங்கி யருளிற் கலந்துசிவ
போகம் விளையப் புணர்ந்தாலும்—வேகத்
தெரிவாய் கிரயத் திருப்பர் குருச்சொற்
பிரிவா ருலகிற் பிறந்து.

இ—ள்: ஆக முதல் நீங்கி அருளிற் கலந்து—உடற்பற்றுமுதலியவற்றினைத் துறந்து திருவருளோடுகலந்து, சிவபோகம் விளைய புணர்ந்தாலும்—பின்னர் சிவத்தையடைந்து அந்நிலையில் முதிர்ந்து விளைகின்ற சிவபோகானுபவத்தை நுகர்ந்தாலும், குருச்சொற் பிரிவார்—குருவினது சொல்லை மீறி நடக்கின்ற சீடர்கள், உலகிற்பிறந்து வேகத்து எரிவாய் நிரயத்திருப்பர்—உலகிற்பிறந்து பின்னர் வேகமாக எழுந்து எரிகின்ற தீயையுடைய நரகில் என்றுநீங்காதிருப்பர்.

ஞானசாரியருடைய சொல்லை மீறி நடக்குங்குற்றத்திற்குக் கழுவாயில்லை என்றபடி.

## குருவழிபாடே பொருளெனக்கூறல்.

குருவை வழிபடுதலே சீடனடைதற்குரிய பெரும்பயனெனக்கூறுத லின் இப்பெயர்த்து.

86. ஆக முயிர்பொருள்கொண் டன்றே யருளளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னரைத்—தாகத்தோர்
வேண்டும் பொழுதெல்லாம் வேண்டுபொருள் வந்ததுபோற்
பூண்டுதொழ லன்றோ பொருள்.

இ—ள்: ஆகம் உயிர் பொருள் கொண்டு— உடல் உயிர் பொருள் மூன்றனையுமேன்றுகொண்டு, அன்றே அருள் அளித்து – அப்பொழுதே ஞானோபதேசத்தைச் செய்து, சோகம் எனப் பாவிக்கச் சொன்னரை— சோகம் பாவனை செய்யுமாறு பணித்தஞானசாரியரை, தாகத்தோர் – ஞான விடாயுள்ளபக்குவர்கள், வேண்டும்பொழுதெல்லாம் வேண்டும் பொருள் வந்ததுபோல்– தாம் விரும்பியபொழுதெல்லாம் விரும்பிய பொருள்கிடைத் தததுபோல, பூண்டு தொழல் அன்றோ பொருள்— குருநாதனது திருவடி களைச் சிரமேற்கொண்டு வணங்குதலே முத்தியாகிய பெரும்பயன். அதனை அறிகுதி.

சோகம்=ச அகம். அது நான் எனப்பாவிப்பது. சிவோகம்- சிவம் நான் எனப்பாவிப்பது. ஏகாரம்- தேற்றம்.

## திருமேனியருமைகூறல்.

சிவஞானதேசிகனது திருமேனியின் பெருமையைக்கூறுதலின் இப் பெயர்த்து.

87. அன்றுமுத லாகவே யாருயிர்கட் காருயிராய்
நின்றருளுந் தம்பிரான் நீங்காம—லென்றுங்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவா யருளாமற் கூறு.

இ—ள்: அன்று முதலாக ஆருயிர்கட்கு ஆருயிராய்—கேவலந்தொடங்கி இதுகாறும் நிறைந்த ஆன்மாக்களிடத்துப் பிரியாது உயிர்க்குயிராய், என் றும் நீங்காமல் நின்றருளுந் தம்பிரான்— என்றும் ஆன்மாக்களை நீங்காது நின்றருளும் ஆன்மநாயகராகிய பிரானார், தாமே குருவாய் அருளாமல்— தாமே ஞானசாரியராகஎழுந்தருளிவந்து அருள்புரியாமல், கரு வாய்ப் பிறப் பை கழற்றினரோ— அன்னைகருவிற் புகுந்துபிறக்கும் பிறவியை நீக்கினா ரோ, கூறு—அதனை நீ கூறுதி.

எம்மிறைவனே மானுடவடிவங்கொண்டு ஞானசாரியாராக எழுந்த ருளிவந்து உன் பிறவியை ஒழித்தருளினார் என்பதாம். ஏ இரண்டுந் தேற் றம். ஓ எதிர்மறை.



## குருவே சிவமென்றல்.

மேற்கூறியவண்ணமருள்புரியுங் குருவே சிவமென்றலின் இப்பெயர்த்து.

88. பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
ஆசி லகலறிவா யாங்ககன்று—பேசரிய
வானந்தம் பெற்றோ ரருட்குருவே யீசனென்பர்
மோனமே முற்று முயன்று.

இ—ள்: பாசம் பசுபதியை பாரித்து பார்த்தனர்—பாசம் பசு பதி என்னும்முப்பொருளினியல்பைப் பரக்கக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர் கள், ஆசில் அகல் அறிவாய் ஆங்கு அகன்று-குற்றமில்லாதபரஞானமாய் அந் நிலையில்வாறிவு வியாபகத்தன்மையடைந்து, மோனமே முற்றும் முயன்று- மோனநிலையிலிருக்கும் நிட்டையையே முழுதுஞ் சாதித்து, பேசரிய ஆன ந்தம் பெற்றோர்—உரைவரம்பிகந்த பேரானந்தத்தைப் பெற்றோர், அருட் குருவே ஈசன் என்பர்— அந்நிலையிற் றம்மைச் சேர்த்த பெருங்கருணையையு டைய குருவே சிவம் என்றுசொல்வர்.

குருவே சிவமாகுந்தன்மை ஏனையோரானறியப்படுதலரிதென்பார் இங் ஙனம்கூறினார். பாரித்தல்-சிந்தித்தல், பார்த்தல்-தெளிதல். கேட்டல் உப லக்கணத்தாற் பெற்றாம். அன்றிப் பாரித்தலில் அடக்கிக் கூறினுமொன்று. ஏ முன்னையது அசை பின்னையது தேற்றம்.

“சும்மாவிரு சொல்லற வென்றலுமே-அம்மா பொருளொன்று மறிந்தி லனே” என்பது நோக்குக.

## குருபணிசெய்வாரை வழிபடுதல்.

குருவின் குற்றேவலைச் செய்யும் அடியாரை வழிபடும்முறை கூறுத லின் இப்பெயர்த்து.

89. கருவேலை தன்னைக் கடப்ப ருலகில்
மருவாத வின்பத்துள் வைத்த—குருவி
னடியா ரடியா ரடியா ரடியா
ரடியாரைச் சார்ந்த வவர்.

இ—ள்: உலகில் மருவாத இன்பத்துள் வைத்த — இவ்வுலகிலெவ் வாற்றானு மடைதற்கரிய பேரின்பானுபவத்தில் தன்னைச்சரணடைந்த சீட னைச் சீவன்முத்தனாக்கிவைத்த, குருவின் அடியார் அடியார் அடியார் அடி யார் அடியாரைச் சார்ந்த அவர் — குருநாதனது அடியாராகிய ஞானயோ கக் கிரியா சரியாவான்களையும், அவருக்குற்[illegible]தொண்டுசெய்யும் உபாயச் சரி யை கிரியா யோக ஞானிகளையுஞ்சார்ந்து அவர்பணிசெய்வோர், கருவேலை கடப்பர்—பிறவிப்பெருங்கடலை நீந்துவர்.

தன்னை அசை, ஏனையோர் கடத்தலரிதென்பதும் பெற்றாம்.

## யோகம்.

90. சன்மார்க்க மீதாஞ் சகமார்க்கஞ் சாற்றுங்கால்
பன்மார்க்க நம் வாயுப் பகர்கருவி—தன்மார்க்கஞ்
சாலவொடுக்கித் தடுத்து வளியிரண்டு
மாலறவே நிற்கை மகிழ்ந்து.

இ—ள்: ஈது சன்மார்க்கம்-இதுவரையுங்கூறியது ஞானநெறியெனப்படுஞ் சன்மார்க்கம், சகமார்க்கம் சாற்றுங்கால்—யோகமார்க்கமாகிய சகமார்க்கத்தினியல்பைக் கூறுமிடத்து, பன்மார்க்கம்—அது அட்டாங்கயோக முதற் பலதிறப்படுவது ஆயினும், வாயுப் பகர்கருவி மார்க்கம் சால ஒடுக்கி-உடலின்கணுள்ள வாயு புறம்பே போந்து மீளுதற்குக் கருவியெனச்சொல்லப்பட்ட இடைபிங்கலை என்னும் வழியைப் பெரிதுமொடுக்கி, வழியிரண்டும் தடுத்து— மேற்கூறியவிருவழியாகச் செல்லும் வாயுக்களையும் புறம்பே போகவொட்டாது தடுத்து, மாலறவே மகிழ்ந்து நிற்கை- வாயு வெளிபோகுங்காரணத்தாலாகிய நினைப்பு மறப்பாகிய மயக்க நீங்கத் தியானப்பொருளைச் சலிப்பின்றித் தியானித்து அத்தியானத்தாற் பெறும் பயனாகிய இன்பத்தை நுகர்ந்து மகிழ்ந்து அந்நிலையில்நிற்றல் என்பதாம்.

ஆம் அசை.

91. அந்த மனத்தாலே யாதார மாறினையுஞ்
சந்தித் ததிற்பொருள்க டானறிந்திட்—டிந்துவி
லோவா வொளிவைத் துருகுமமு தன்நிறைக்கி
லோவா வொளியா முரு.

இ—ள்: அந்த மனத்தால் ஆதாரம் ஆறினையும் சந்தித்து— அந்த மயக்கநீங்கிய அறிவோடு மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னுமாறு தாரங்களையும் ஒன்றன்பின்னொன்றாகப் பார்த்து, அதிற் பொருள்கள் அறிந்திட்டு—அவ்வாறு தாரங்கட்கு முறையே அதிதெய்வங்களாகிய விநாயகர், பிரமா, திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் என்னுந்தேவர்களைத்தரிசித்து, ஓவா ஒளி இந்துவில் வைத்து-என்று நீங்காது மூலாதாரத்து விளங்குகின்ற சுடராகிய ஒளியை சுழுமுனை நாடிவழியாகச் சொடுசென்று விந்துத்தானமாகிய புருவமத்தியிற்சேர்த்து, உருகும் அமுது உன் நிறைக்கில்—அவ்விந்துத்தானத்திநின்று முருகுகின்ற அமுதத்தை உடம்பினுள் நிறைத்தால், உரு ஓவா ஒளியாம்—அவ்வுடல் என்று நீங்காத ஒளிவடிவாகும். மனம் சண்டு அறிவு.

விந்துத்தானத்தமுதை உருக்கி உடலில் நிறைத்தல் அரியசெயலென் பார் உருகுமமுதன்நிறைக்கில் என்றருளினார். உம்மை-எண். ஏ தான் அசை.

92. நின்ற வொளியுருவி னீங்காமல் நிற்கவே
என்று மழியாம லின்புற்றுக்—கொன்றையந்தார்த்
தானுருப் போலேபின் சாரூப் பியத்திலே
மாணவக வாழ்வாய்காண் மற்று.



இ—ள்: நின்ற ஒளி உருவில் நீங்காமல் நிற்க — மேற்கூறியவண்ணமுன்னுடலிற் சேர்ந்துநின்றவொளி அதைவிட்டு நீங்காதுநிற்க, என்றும் அழியாமல் இன்புற்று – அவ்வுடல் என்றுமழியாது இன்பத்தையனுபவித்து, கொன்றையந்தார் தானு உருப்போலே—அழகிய கொன்றைமாலையையணிந்த என்றுமொரு தன்மையனாகிய இறைவனது திருவுருவத்தைப்பெற்று, சாரூப்பியத்திலே பின் வாழ்வாய்—சாரூப்பியமுத்தியில் பின் வாழ்வாய், மாணவக காண்—மாணவகனே யதனை அறிகுதி.

சாரூப்பியமாவது சிவவடிவத்தைப்பெற்றுச் சிவலோகத்து வாழுதல். ஏ மூன்றும், மற்றும் அசை.

## கிரியை.

93. புத்திர மார்க்கம் புகையொளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூல மற்றெவையு—முத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமல் நாள்.

இ—ள்: புத்திர மார்க்கம் — புத்திரமார்க்கத்தைச் சொல்லுமிடத்து, புகை ஒளி மஞ்சனம் பூ அமுது வைத்து— தூபம் தீபம் தீர்த்தம் பூ திருவமுது ஆகிய இவைகளையமைத்து வைத்துக்கொண்டு, தாம்பூலம் மற்றெவையும் உத்தமமாய்த் தேடிவைத்து—தாம்பூலம் முதலிய சிவபூசைக்கு வேண்டிய ஏனையவற்றையும் உத்தமப்பொருளாய்த் தேடிவைத்துக்கொண்டு, பின்னைச் சிவபூசை செய்வதற்கு—அதன்பின் சிவபூசைசெய்யுமாறு, நாள் அவத்திற் செல்லாமல் நாடு—உன் வாழ்நாள் வீணேகழிந்துபோகாது விரும்பிச்செய். மற்றெவையும் என்றதனால் கந்தம் பழம் முதலிய ஏனைய பொருள்களுங் கொள்ளப்படும்.

94. சத்தியைந்து செய்து துகளறு மந்திரத்தால்
அத்தமைந்து பத்துமுக மைந்தாக—வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படியிற் றாபித்துப்
பத்தியால் மேனிதனைப் பார்

இ—ள்: ஐந்து சத்தி செய்து—பூதசத்தி தானசத்தி திரவியசத்தி, மந்திரசுத்தி இலிங்கசத்தி எனப்படும் ஐந்துசுத்திகளையுஞ்செய்து, துகள் தீரும் மந்திரத்தால்—சுத்தியடைந்த அம்மந்திரங்களால், முகம் ஐந்து அத்தம் பத்தாக வைத்து வைத்து—ஐந்துதிருமுகங்களும் ஒவ்வோர் திருமுகத்திற்கு இரண்டிரண்டு திருக்கரங்களாகவும் பத்துத்திருக்கரங்களையும் வைத்து, விதிப்படி வித்தியாதேகம் தாபித்து—சிவாகமத்திற்சொன்ன முறைப்படி வித்தியாதேகத்தைத் தியானத்தோடு தாபித்து, மேனிதனைப் பத்தியால் பார்—எம்பிரானுடைய திருமேனியைப் பேரன்போடும் பார்க்குதி.

ஐந்து சுத்தி முதலியவற்றின் விரிவை சிவாகமங்களினும் பத்ததிகளினுங் காண்க.

95. பார்த்த திருமேனிப் படிகந் தனிற்பரனைக்
கோத்ததிரு மந்திரத்தாற் கொண்டுவந்து—பர்த்தருளச்
சொல்லிப் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்தின்
சொல்லின் படியே தொடங்கு.

இ—ள்: பார்த்த படிகத் திருமேனியில்—மேற்கூறியவண்ணம் பார்த்த வித்தியாதேகமாகிய படிகத்திருமேனியில், கோத்த திரு மந்திரத்தால் பரனைக் கொண்டுவந்து— பிராசாத மந்திரத்தோடு துவாதசாந்தத்திலிருக் குமிறைவனைக் கொணர்ந்து, பார்த்தருளச்சொல்லி பராக்கறுத்து— திருக் கடைக்கணோக்குமாறு விண்ணப்பஞ்செய்து பராக்கறுத்து, சோதி சிவாக மத்தின் சொல்லின்படியே தொடங்கு— சோதிசொரூபராகியஇறைவனாலரு ளப்பெற்ற சிவாகமத்தில் விதித்தபடி சிவபூசையைத் தொடங்குதி.

கோத்த திருமந்திரம்-பிராசாதமந்திரம். பராக்கறுத்தல்-அபிமுகமாக்கல். ஏ-அசை.

96. சோராமற் பூசித்துச் சொன்னபடி தில்லிதழித்
தாரார் சமீபத்திற் றானிருந்து—வாராமற்
றானே பரனளிக்குஞ் சங்கரனா ரம்முத்தி
தானே தரினுந் தரும்.

இ—ள்: இதழித் தாரார் சமீபத்திலிருந்து — கொன்றைமாலையை யணிந்த சடாமுடியையுடையவிறைவனுக்குச்சமீபமாகவிருந்து, சொன்னபடி சோராமல் பூசித்து தில்—சிவாகமத்தில் விதித்தபடி சோர்வின்றிச் சிவபூ சையைச்செய்து கிரியாமார்க்கத்தில் வழுவாது தில், பரன் வாராமல் அளி க்கும்—பரம்பொருளாயினார் நீ மீண்டும் பிறப்பிற்புகாது என்றுந்தமக்கணி த்தாகவிருக்குஞ் சாமீப்பிய முத்தியைத் தந்தருளுவார், சங்கரனார் அம் முத்தி தானே தரினுந் தரும்— ஆன்மாக்களுக்கு என்றுஞ் சுகத்தையே செய்யும் பிரானுதவின் பரமுத்தியையே தந்தருளவுங்கூடும்.

சோராமற் பூசித்தல்—மந்திரலோபங் கிரியாலோபமின்றி ஊக்கத் தோடுமன்போடும் பூசித்தல். சிவபூசையில் அந்தர்யாகஞ் செய்யுமிடத்து ஆன்மா சுத்தியடைந்து சிவத்தைத் தரிசிக்கும். பின் அங்ஙிலையினின்றுஞ் சிவத்தோடு கூடுவதாகிய சிவயோகத்தைப்பெற்று மதனின்றுஞ் சிவபோ கத்தையடைந்து பரமானந்த வாரிதியிற் றிளைக்குமென்பார் சங்கரனாம் முத்திதானேதரினுந்தரும் எனவுங் கூறியருளினார்.

தான் இரண்டும் அசை. முத்தி தானே என்றவிடத்து ஏ தேற்றம்.

இன்னுமிதனை, "கறைமலி தருமனனொடுமுகைகமழிருமலர்பகை மிகுவனமொளி —திறைபுனல்கொடுதனைக்கினைவொடுகியதரும்வழிபடுமடிய வர்—குறைவிலபதமணைதா வருள்குணமுடையிறை" எனனுந் தமிழ்மறை யில் குறைவிலபதம் என்பதனை நோக்குக. சண்டு பதம் என்பது சாமீப்பி யத்தையும் இறைவன் திருவடியையுமுணர்த்தி அத் திருவடியைச் சேரும் பரமுத்தியையுமுணர்த்திநிற்றல்காண்க.



97. தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரனா ரின்புற்ற
பூதிதிரு வேடம் போற்றியே—நீதியினாற்
பூங்கா வனஞ்சமைத்துப் பூமாலை புண்ணியர்க்குப்
பாங்காகச் செய்கை பரிந்து.

இ—ள்: தாத மார்க்கம் சாற்றில்— தாதமார்க்க மெனப்படுஞ் சரியா மார்க்கத்தைச் சொல்லுமிடத்து, சங்கரனார் இன்புற்ற பூதி திருவேடம் போற்றி —சுகத்தையேசெய்யும் பிரானார்க்கு என்றுமின்பம்பயக்கின்ற விபூதி உருத்திராக்கமாதிய திருவேடத்தை வணங்கி, நீதியினால் பூங்காவனம் சமைத்து—விதிதவறாது பூங்காவனத்தையுண்டாக்கி, புண்ணியர்க்குப் பரிந்து பூமாலை பாங்காகச் செய்கை — புண்ணியமூர்த்தியாகிய பிரானுருக்குப் பூமாலையை அன்பினோடு அழகுபெறக் கட்டுதலாகும். ஏ அசை.

98. அலகு திருமெழுக்கிட் டாலயத்தி லன்பா
லிலகு திருவிளக்கு மேற்றிப்—பலகாலுஞ்
சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர்.

இ—ள்: ஆலயத்தில் அன்பால் அலகு திருமெழுக்கிட்டு இலகு திரு விளக்கும் ஏற்றி—திருக்கோயிலில் அன்பினோடு திருவலகிட்டுத் திருமெ ழுக்கிட்டு ஒளியையுடைய திருவிளக்கையுமேற்றி, பல காலும் சென்று பல காலும் வணங்கி—பலகாலங்களினுஞ்சென்று பலதரம் பிரதக்கணஞ்செய் து வணங்கி, திருவடிவு ஆரஞ்சேர்த்தி—எம்பிரான் திருமேனியிற் பூமாலை சாத்தி, நின்றிடுகை தொண்டர் பணி—அத்தாதமார்க்கத்துத் தவறாது நிற் றல் அத்தொண்டரது பணியாகும், நேர்—நீயதனையறிந்து கடைப்பிடித் தொழுகுவாயாக.

பெரிதாய் விளக்கமுடைய திருவிளக்கென்பார் இலகுதிருவிளக்கென் றார். பலகாலும் என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

"நிலைபெறுமாறெண்ணுதியேல்நெஞ்சேநீவாநித்தலுமெம்பிரானுடைய கோயில்புக்குப், புலர்வதன்முனலகிட்டுமெழுக்குமிட்டுப்பூமாலைபுனைந்தேத் திப்புகழ்ந்துபாடித், தலையாரக்கும்பிட்டுக்கூத்துமாடிச்சங்கராசயபோற்றி போற்றியென்று, மலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதீயென்றுமாரூராவென் றென்றேஅலறாநில்லே." என்னுந் திராவிடச்சுருதியுநோக்குக.

99. கொன்றையந்தார் வேணியர்க்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து—சின்று
ரவலோகந் தன்னி லடையா ரடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து.

இ—ள்: கொன்றையந்தார் வேணியர்க்கு—அழகிய கொன்றைமாலை யணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானுக்கு, பல கோயில் சமைத்து—பல கோயிலைப் புதிதாய்க்கட்டுவித்து, பொன்றியவை முற்றும் புதுக்குவித்து நின்றார்—பழுதடைந்தவை முழுவதையும் புதிதாகச்செய்வித்து இச்சரியாமார்க்கத்து நின்றவர், அவலோகந் தன்னிலடையார்— பிறவிக்கேதுவாகிய வினையைச்செய்கின்ற அவலோகத்திற்பிறந்து துன்புறார், சிவலோகந்தன்னில் சிறந்து அடைவர்—சிவலோகத்திலே சிறப்போடு சேர்வர் அதனை அறிகுதி.

100. அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்தங்— கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமற் கூறக் கொடி.

இ—ள்: அந்த மலம் அறுத்து — ஆன்மாக்களை அனாதியே பற்றித் துன்ன ஆணவமலத்தையும் அதன்வழிவந்த கன்மம் மாயை என்னும் மலங்களையுமறுத்து, இங்கு ஆன்மாவைக்காட்டி—இந்நிலையிலான்மாவைச் சுத்தி செய்து காட்டி, அதற்கு அந்த அறிவை அறிவித்து—அச்சுத்தியடைந்த ஆன்மாவுக்கு மெய்ஞ்ஞானத்தை அனுபவவாயிலாலுணர்த்தி, அங்கு இந்த அறிவை மாறாமல் மாற்றி—அந்நிலையில் பாசவறிவு பசுவறிவிரண்டனையும் மீண்டுமான்மாவவற்றிற் செல்லவொட்டாது மாற்றி, மருவு சிவப்பேறு—ஆன்மாவென்றுநீங்காதனுபவிக்குஞ் சிவபோகத்தை, கூறாமல் கூற கொடி—அனுபவவாயிலாலுணர்த்துதற்கு இந்நூல் ஓர் கொடி என்பதாம்.

“சொல்லாமற் சொன்னவரை” என்பதும் இது. இந்நூல் சிறப்புடைய தாய் நின்று நிட்டையை யெளிதினெய்துமாறுணர்த்துதலிற் கொடி எனப் பட்டது.

அந்த மலமறுத்து என்றதனாலே சாக்கிரத்தின்கணுள்ள பதின் மூன்றவதரங்களையும், ஆன்மாவைக் காட்டி என்றதனாலே சொப்பனம் சுழுத்தி என்னுமிரண்டினுமுள்ள எட்டவதரங்களையும், அதற்கு-அந்த வறிவை அறிவித்தங்- கிந்த வறிவை- மாறாமல் மாற்றி மருவ சிவபோகம் என்றதனால் துரியந் துரியாதீத மிரண்டினுமுள்ள வொன்பதவதரங்களையுங் கூறியிருத்தலுங் காண்க. கொடி-ஞானதானக்கொடி என்றபடி.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவன் திருவடிவாழ்க.

## துகளறுபோதம் உரை முற்றிற்று.

---